உ.

கணபதிதுணை.

# வீரசேகரமாமணிமாலை.

# திருவிரட்டைமணிமாலை.



இவை

ஸ்ரீ வன்றொண்டரவர்கள்

மாணாக்கருள் ஒருவரும்

காரைக்குடி

ராம. கு. இராமநாதச் செட்டியார்

குமாரருமாகிய

சொக்கலிங்கச் செட்டியாரால்

இயற்றியன.

ஷை யூர்

வீ. லெ. அளகப்ப செட்டியார் குமாரர்

இராமநாதச்செட்டியார்

வேண்டுகோளின்படி

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

அச்சிடப்பெற்றன.



சார்வரிஹூ ஆவணிமீ.

1901

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

இஃது,

சேற்றூர்ச் சமஸ்தானம் வித்துவான்

## இராமசாமிக் கவிராயரவர்கள் குமாரர்

உடுமலைப்பேட்டை எம். ஆர்,

## கந்தசாமிக்கவிராயரவர்கள்

இயற்றியது.

கொண்டலைமேற் கொண்டலையுந் தண்டலைசூழ் வளக்காரைக் குடியூர் வாழ்வோன், கண்டலைமுன் னீத்தபிரான் வளையெடுத்து மணியெடுத்துங் காலாற் சென்று, பண்டலையும் படியுமிர்தப் படியினொரு மாதலனும் படியு மாண்பு, கொண்டலைசூழும்புவியிற் புகழ்படைத்த தனவணிகர் குல சிரேட்டன். (க)

முருத்தேவை நிகருநகை விழிமடவார் பொன்புவியே முற்று நீத்த, கருத்தேவைத் தரனடியைக் கனவினிலுங் கருதியுளங் களித்தோன் முன்னோர், தருத்தேவைப் பணியாச்குங் குறுமுனிபோற் றமிழுணர்ந்த தலைமை யாளன், திருத்தேவை வன்றொண்டக் குருமணிபாற் பன்னூலுந் தெளிந்த மேலோன். (உ)

பொற்பனையாந் துதிக்கையுறு புத்தேட்கும் வேற்கரத்துப் புல்வோ னுக்கும், வெற்பனையாட் கும்பரற்குந் தோத்திரம்பற் பலசனிந்து விண்டோ னுளுங், கற்பனையா வெனப்பணிக்கோ வும்பகரத் திருப்புத்தூர்க் கவின்பு ராணங், கற்பனையாற் சொன்னல்த்தோ டெந்நலத்தா லுஞ்சிறக்கக் கழறுஞ் செம்மல். (௩)

அக்கலிங்க முதலமைத்துப் புவிபுரக்கு மரசர்மதித் தறையுஞ் சீர்த்தி, நக்கலிங்க மணிநிதிய முதற்பலவா ணருக்களிப்போ னுள நீயெ

ன், பக்கலிங்க வாவொடுவா வெனவெனக்குப் பரிந்துரைக்கும் பண்பார் நண்பன், சொக்கலிங்க நாமமுறுஞ் சிவபூசா துரந்தரவித் துவ னெம் பிரன். (ச)

காராரு மணிமிடற்று னர்ச்சனைபாட் டேயென்னக் கரைந்த தோர்ந்து, நீராரும் வளத்தளகை யுமாவீர சேகரப்பேர் நிமல னூர்க்கு, நாரான நாரெடுத்து நன்மலராஞ் சொன்மலரை நன்கா ராய்ந்து, சீராரும் படிதொடுத்து மாலையென்றே பெயருமிட்டுச் செகங்கொண்டாட.

வன்றொண்ட ருரைத்தகல்வி வலியுடையா னெனற்கேற்ப மணிவாய் விண்டு, வன்றொண்டப் பெருமான்முன் வகைப்படுத்தி யருளுயன் மார்க்க ளானோர், பொன்றொண்டி னிடையுளநுண் பொருள் விளங்க வாய்மைநிலைப் பொருண்மை காட்டித், தன்றொண்டின் றிறமுடித்துப் பட்டினத்தார் சரிதமும்பின் றழுவப் போற்றி. (ரு)

சுட்டினு னன்புமதுத் துளிக்கவெங்கண் மனச்சுரும்பர் குழும் பண்பா, லேட்டினுர் மலர்மாலை யென்கோநல் லிசையொளியை யிலகக் கொண்டு, பாட்டினுர் மெய்யடிய ராகியசி காமணிகள் பயிலும் பண்பா, னூட்டினுர் தெய்வமணி மாலையென்கோ வின்னுமுன்னி நவிலுங் காலை. (௬)

மலர்மாலை வாடலுறு மணிமாலை பொள்ளல்பந்த மருவு மாண்பான், மலர்மாலை மணிமாலை யல்லவென்கோ ஞானவொளி மணிவிளக்காய்ப், பலர்மாலை விலக்குதலா லீசனருண் மாலையென்றே பகர்கோ கல்வி, வலர்மாலை யனைத்துமுள மதிக்குமிதன் பெருமை யென்னுல் வழுத்தற் பாற்றே. (அ)

இத்தகைய சொன்மாலைக் கவிதோறு மடிதோறு மிசைதோறுந் தேம், புத்தமிழ்தந் துளிந்திருக்கு நலனோக்கிக் குறுமுனியும் பொதிகை யுற்றான், முத்தமிழ்நா வலர்வியந்து போற்றுதா ருளர்கொலிந்த முந்நீர் வைப்பிற், பத்தர்சிகா மணியெனுமிச் சொக்கலிங்க பூமனிசை பல்க மாதோ. (கூ)

சிறப்புப்பாயிரமுற்றிற்று

---

சிவமயம்.

# வீரசேகரமாமணிமாலை.



## காப்பு.

திங்களங் கண்ணியி னான்வீர சேகரன் சேர்கணுமை
பங்கினன் சேவடிப் போதினைப் பாடும் பணிக்கருளு
மங்கணன் சங்கர னம்பிகை பால னளகையைந்து
செங்கரன் குரக ரூபி கணேசன் றிருவடியே.

## நூல்.

பூவா ரடியிணை நாடொறும் போற்றும் புனிதவன்பர்
தேவார மேதிரு வாசக மேதுதி செய்யவருள்
சேவார் கரத்த வடியேற் கரணின் றிருவருளே
மாவா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௧)

வில்லார் நுதன்மனை மக்கணல் வாழ்வு மிகும்பொருண்மு
னெல்லா மளிக்கு நினைமோக்க தாயக னென்பதொன்றே
சொல்லார் மறைமுடிக் குள்ளார்ந் திலகுஞ் சுடர்மணியே
மல்லா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௨)

ஆனே றிவரு மழகா வருட்கட லாரமுதே
தேனேர் மொழியர் மயனீக்கி யாரருள் செய்தியென்றே
நானே ருரைப்பதென் னீயே யெனையரு ளுதனங்கை
மானே யளகை யுமாவீர சேகர மாமணியே. (௩)

சிந்தா மணிச்சொன் முதன்மொழி தான்பெயர் செப்ப லன்றி
நந்தா தெதிர்மறைப் பாற்பெய ரெச்ச நவிலுமணி
யிந்தார் முடிமணி யேறூர் கொடிமணி யெங்கண்மணி
மைந்தா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (ச)

முப்புர நீற்றக்கொன் றேனுஞ்செய் யாத முறுவன்மணி
வெப்பழன் மூவர்க் கருள்வாவி யாக விதித்தமணி
யெய்ப்பினில் வைப்பென வெய்பெரு மக்க ளியம்புமணி
வைப்பெம் மளகை யுமாவீர சேகர மாமணியே. (ரு)

சிந்தா ரருணிறை நாயக தாயக நீயகஞ்சே
ரிந்தார் நுதலியர் மோகா டவிக்கு ளிடருழந்தே
யந்தோ வருந்து மெளியேற் கரணின் னருட்பதமே
மைந்தா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (சா)

கல்லாத மூடன் கழியாத தோடன் கழிந்தவஞ்சன்
பொல்லாத பாவிவெம் பொய்யே யவாவிநின் பொன்னடிக்கன்
பில்லாத பேதை யெளியேற்கித் தீதை யிரித்தருளாய்
வல்லா யளகை யுமாவீர சேகர மாமணியே. (எ)

பொற்கோயில் சூழ்கிலன் றாசேன் மெழுகிலன் பூப்புனையே
னிற்கோர் துதியும் புகலே னினைகில னேரிறைஞ்சே
னெற்கோ ருயுநெறி யுண்டோவென் றேங்கி யிரங்குகின்றேன்
மற்கூ ரளகை யுமாவீர சேகர மாமணியே. (அ)

ஐந்தூய்மை செய்தரி தந்தரி யாகமுன் னூற்றியலர்
மந்தா கினிமுத னந்தாத் திரவிய மற்றுங்கொண்டே
யெந்தா யுனைப்புறப் பூசையுஞ் செய்திலன் யாதுசெய்வேன்
மைந்தா வளகை யுமாவீர சேகர மாமணியே. (கூ)

ஆதார நாடி யெழுத்ததி தேமுன் னறிந்துசென்றே
மீதான நின்பொற் சிலம்பொலி கேட்டரு மேவுமின்பிற்
கேதேது மில்லா வெளியேற் சரணின் னிணையடியே
மாதா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௪0)

பதி*பாசி பாச வியலோர்ந்து பாசப் பகைதணந்து
விதியாற் பசுத்துவ நீக்கஞ் சிவத்துவ வீக்கமுஞ்சார்
துதியார் பெரிய ரிடஞ்சேர் விதியிலன் றாமலர்க்கான்
மதியா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௪௧)

விழிபூட்டி வெய்ய மொழிமாட்டி யீர்த்து விழுமழலைப்
பழிகூட்டு மாமலை யேற்றிய காதப் பகமெனும்பாழ்ங்
குழிவீட்டி யாட்டுங் கொடியாரை நீத்துனைக் கூடுதற்கோர்
வழிகாட் டளகை யுமாவீர சேகர மாமணியே. (௪௨)

அஞ்சேலென் றோதி யருள்க வடாதுமுற் றுற்றுமெனை
வெஞ்சேற் றமிழ்த்துக செய்யலை யென்றெவர் மேற்புகல்வார்
தஞ்சேழை யேற்குன் சரணன்றி யுண்டுகொ றண்பொழில்வான்
மஞ்சே யளகை யுமாவீர சேகர மாமணியே. (௪௩)

புரியா விழிதொழின் மிக்குலைந் தேனுடல் போகுமந்நாட்
பெரிதாந் துயரென னைஞ்சேழை நெஞ்சகம் பேதுற்றந்தோ
வெரிவா யிழுதிற் கரைவதஞ் சேலென் றிசைத்தருளாய்
வரமே யளகை யுமாவீர சேகர மாமணியே. (௪௪)

அன்னே யிசைப்பதென் சேயேனென் றீமை யனைத்துமுன்னி
யென்னோ வருவ தினியென வேழை யிரங்குகின்றே
னின்னேரெத் தீங்குமன் னீங்குமென் றோதுப நீயருளாய்
மன்னே யளகை யுமாவீர சேகர மாமணியே. (௪௫)

---

* பாசத்தையுடையது பாசி, எனவே பசுவென்பது பொருள்.

உடலோ கனவுயிர் சிற்றறி வுற்றதிங் கோதுமெய்ந்நூற்
கடலோ பலபிணி வாட்டுமெந் நாளுங் கடைப்பட்டவென்
னிடமா ரறிவையு மான்மூ டியதினி யென்செய்குவேன்
வடமா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கசு)

வாணு ளோர்நாழிகை பொன்கோடி நல்கினும் வாங்கரிதால்
வீணே கழிந்தபல் லாண்டுகே டவினை மிக்கிழைத்தேன்
சேணூர் மறல்செய் கொடுந்தண்ட மஞ்சித் தியங்குகின்றேன்
மாணே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கஎ)

வஞ்சே யென்றாய்கொடும் பொய்யே யென்றுரைநன் மார்க்கமெற்
நஞ்சே யமுத மடவார் வெம்மோக நவைமுற்றும்பா [கோர்
லின்சோ றெனக்கொண் டுலைவேற் கருணல னெய்துங்கொல்லோ
மஞ்சா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கஅ)

நிறந்தோ பலவ மணிகளோவ் வொன்றொர் நிறத்ததெங்கு
மறியார் பலர்சொன் னிறனுங் கெவையு மமையநிற்கு
நெறிசார்ந் தவர்சொனின் மெய்ந்நிற னுஞ்செந் நிறத்திலங்கு
மறைகூ றளகை யுமாவீர சேகர மாமணியே. (ககூ)

மறையோ விடுமணி மாதா ரிடமணி மால்யன்முன்
மறைமா முடிமணி வான்மணி யென்று வழுத்துமணி
மறையோர் துதிமணி மாண்பார் பதிமணி மாறின்மணி
மறைகு ழளகை யுமாவீர சேகர மாமணியே. (உ0)

அருமா மறைமுடிக் குள்ளே திகழ்மணி யம்மறைக்குந்
தெரியா மறைமணி யுஞ்சவர் நெஞ்சகச் செம்பொன்மணி
யருளே பொழிமணி யன்பே கொளுமணி யாத்தமணி
வருவா னளகை யுமாவீர சேகர மாமணியே. (உக)

தற்போத நீற்பி னொளிந்திடு மாவியுட் டான்கெடிலோ
சிற்போத மாத்தனக் குள்ளே யொளிக்குமச் சிவனையிப்
பொற்பா ரறிகுவ ரெங்கேனு மிம்மணி போலொன் றுண்டோ
மற்பா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஉ)

நடமே புரிமணி யைந்தொழி லென்றதை நாட்டுமெனி
யிடனோர் நிறம்வல னோர்நிற மாமணி யிவ்விரண்டு
முடனு மொருமணி யொன்றே தருமணி யோங்குமன்பர்
மடநூ றளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௩)

வித்தார வைதிக வேதாந்த போத வியன்மணிமெய்ச்
சுத்தாத் துவிதநற் சைவசித் தாந்தச் சுடர்மணியிங்
கெத்தாய ரெத்தந்தை யென்றார் மனமணி யின்னருளே
வைத்தா ளளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௪)

பொருள்வா யுலகர்க் கருண்மா மறைசொல் பொதுமணியா
ரருள்வாய் திறற்சத் திநிபாதர் சென்னிக் கணிமணியாய்த்
தெருள்வாய் சிவாகம போதாத் துவிதச் சிறப்புமணி
மருள்கா யளகை யுமாவீர சேகர மாமணியே. (உரு)

சாட்டா னலத்தி னுயிர்கட் கியன்மணி காணுநெறித்
தேட்டார்க்குப் பானெய் மணிதயிர் நெய்மணி தீவிரர்க்கு
வேட்டாரும் வெண்ணெய் மணிதீ விரதர வித்தகர்க்கு
வாட்டோ யளகை யுமாவீர சேகர மாமணியே. (உசா)

சரியா கிரியை சிவயோக ஞானியர் தம்முனரு
ளுருமா மணிபுறத் தோருப யம்மணி யுட்புறத்தே
யருமா மணியகத் திம்மூன் றகன்றெங்கு மார்ந்தமணி
மருமா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௭)

தோன்றாத் துணைமணி காட்டங் கடைந்திடத் தோன்றனல்போற்
சான்றார் மணிகறப் பத்தோன்று பாலெனச் சாருமணி
யின்று விளங்கன் றுனப்பொழி பாலி னிலங்குமணி
வான்று ளைகை யுமாவீர சேகர மாமணியே. (உ௮)

சோதி மாமணி மும்மணி சொள்கெனுஞ் செம்மணியெம்
வாகீசர் சேகர மீதருள் பாத மலர்மணிமா
யோசேர்க் கிரு பெண்மணி கண்மணி யொண்மணிசிர்
மாகா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௯)

மணிவா சகர்தத் திருவா சகப்பொன் மணிச்செப்புளோர்
மணிவா சகமன மாதிய கோசர வாய்மணிசெம்
மணிவா சகன விதழியஞ் சேகர வான்மணிகண்
மணிவா னளகை யுமாவீர சேகர மாமணியே. (௩0)

ஆரிய வேதக் கழைபிழி சாரமென் றன்னன்மகிழ்
சீரிய மூவர் திராவிட வேத சிரமணியன்
போரியல் வாத புரியா ருபகிடத் துண்மணிது
மாரி யளகை யுமாவீர சேகர மாமணியே. (௩௧)

திருவார் தருவெண்ணெய் நல்லூர்மெய் கண்ட சிவகுரவ
னருள்வாய்மை யேசொல் சிவஞான போதக்கண் ணுடிகொண்டே
யொருவாது நோக்க வொளியாதெங் கெங்கு மொளிருமணி
வருமா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (௩௨)

திருத்துறை யூரி னமராதி சைவ சிகாமணியெய்க்
கருத்து விரித்த சிவஞான சித்திக் கடலினுள்ளே
யருத்தி திருத்தி யருளாற் கடைந்தெடுத் தன்பருண்ணு
மருத்தெம் மளகை யுமாவீர சேகர மாமணியே. (௩௩)

மறையோர் சிகாமணி மாமறை ஞானசம் பந்தமணி
முறையே யுமாபதிக் குண்மை யொழுக முதமளித்து
நிறைவாழ் வருண்மணி தன்மனக் கோயி னிலாவுமணி
மறைகூ றளகை யுமாவீர சேகர மாமணியே. (ருச)

அனம்பாலிக் குந்தில் லையில்வாழு மந்தணர்க் கன்றுதன்னை
மனந்தா யுமாபதி நூற்பே டகத்தமர் மாமணிகா
நினைந்தோர்மி னென்று திருவாய் மலர்ந்தரு ணேயமணி
வனஞ்சா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (ருரு)

சந்தான மாகுர வோர்சற் சமயநற் ருபனஞ்செய்
முந்தா ரருணிறை சிந்தே யெனுமெம் முனைவருள்ளே
நந்தா தொளிர்மணி சிந்தா மணிபல நல்குமணி
மைந்தா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (ருசு)

தன்பான் மறையிற் றமிழ்மறை கற்பமுன் றன்னன்பர்வா
யன்பா லுறலுணர்ப் பாணுரை யூர்நம்பி யாலொருகா
லின்பாற் பொதுவில் வெளியாக்கிக் கோவைசெய் தீந்தமணி
மன்பா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (ருஎ)

கரங்கொண் டசைக்கு மணியோசை நீட்சி கடப்பமன்றிற்
றரங்கொண் டலகென் றிருங்காதை முற்றுந் தனையுந்தன்வாக்
குரங்கொண் டிலக முதல்சேக்கி ழார்க்கரு ளொண்மைமணி
வரங்§கொண் டளகை யுமாவீர சேகர மாமணியே. (ருஅ)

அனபாய சோழநம் பேரரு ளாலுயிர்க் காமிடர்கூர்
மனபாய நீக்குந் திருத்தொண்டர் காதை வயங்கத்தந்தான்
கனபா யருட்சே வையர்கோன் வினவெனக் காட்டுமணி
வனபா யளகை யுமாவீர சேகர மாமணியே. (ருகூ)

---

§ கொண்டவென்னும் - பெயரெச்சத்தீறுதொக்கது.

நன்னேரில் சுந்தரந் தான்கூவ வந்து தருப்பணத்திற்
பின்னால மங்கைகொண் டாலால சுந்தரப் பேர்புனைந்த
வென்னு தனைநம்பி யாரூர னென்னவிங் கீந்தமணி
மன்னே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௪0)

மலவிரு ளெஞ்சுந் தரமணி யாலன்றி மாற்றரிதென்
றுலகுய வுய்ப்ப மகளிரைப் பார்ப்பித் ததுநிபமா
நிலனுறு கென்றருட் பானசை யூக்க நிகழ்த்துமணி
வலமன் னளகை யுமாவீர சேகர மாமணியே. (௪௧)

ஒன்று யிருந்து மிறைமுன் னடிமை யுரைப்பதிவ்வா
றென்றே யுணர்த்தமை யன்மா னுடமய லெய்தும்வழிச்
சென்றே தடுத்தருள் கென்றார்க்கங் காகெனச் செப்புமணி
மன்று ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௪௨)

சருமம் நியதி கடந்தூட்ட லின்றெனக் காட்டவொழித்
தொருமணஞ் சொற்பொருள் யாதேனுந் தானென் றுணர்த்தநம்பி
திருமுனம் பித்தனென் றோதவெள் கேனெனச் செப்புமணி
வருமன் றளகை யுமாவீர சேகர மாமணியே. (௪௩)

அருளா லறச்சஞ் சிதஞ்சார் வினையுட லார்வினைதான்
மருவாமு னேன்று கொளறேற்ற நம்பி மணம்புரிவித்
தொருவா தவன்றிறத் தெல்லாம் புரிந்திட் டுவக்குமணி
வருமா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (௪௪)

தேவார மாதிய வாம்பன் னிரண்டு திருமுறையுஞ்
சேவார்தன் வாக்கே யெனுமுண்மை யார்க்குந் தெளித்தற்கன்றே
பாவா ரடிபத மாதிகைச் சாத்திட்ட பான்மைமணி
மாவா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௪௫)

நாவார் தருதிருத் தொண்டத் தொகைக்கடி கல்குமணி
யோவாம லப்பொரு ளாமறை யோருள் ளொளிருமணி
தேவாதி தேவ சிகாமணி சேவிற் றிகழுமணி
மாவா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (சகூ)

திருநீல கண்டருக் கோடீந் தருட்செய றேர்றுமணி
பொருவா நிட்காமியென் றோர்ப்பா னதின்முற் புகுத்துமணி
யருள்வாரி மூழ்க்கு செயல்காட்ட வாவியி னூட்டுமணி
வருவா னளகை யுமாவீர சேகர மாமணியே. (சஎ)

எனையா ளியற்பகை நாயக மாமணி யாலெவர்க்கு
மனையாதி பற்றறுத் தத்துவி தானந்த வாழ்வுபெற
னினையா வருமைய தென்றே விளங்க நிகழ்த்துமணி
மனையா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (சஅ)

இளையான் குடியருண் மாறனெம் மான்மனைக் கேகுமணி
விளைமா மலத்தை வறுத்தவித் தாக்கும் விதந்தெரிப்பான்
முளைவாரி யின்னமு தூட்டுவித் தாண்டருண் முக்கண்மணி
வளமா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (சகூ)

மெய்ப்பொரு ளாமெம் பெருமாற் குடலுமெய் வேடத்துக்கே
யர்ப்பண மாக்குமெய்ஞ் ஞான நிலையளித் தாண்டமணி
தற்பர மாமணி சிற்பொரு ளாமணி சார்ந்தவர்க்கு
வைப்பெம் மளகை யுமாவீர சேகர மாமணியே. (ருo)

புறகென்று நம்பியை மூன்விறன் மிண்டர்தம் மாற்புகல்வித்
துறவொன் றடிய ருடனூர் தலைமை யுளதெனவே
யறைதந் தவர்மகி மாபலன் சாட்டி யருளுமணி
மறைதங் களகை யுமாவீர சேகர மாமணியே. (ருக)

சோவண மாவருட் சத்திநி பாதங் கொடுத்தருளித்
தாவண வாவமர் நீதிமெய் யன்பர்த் தராசுநிலே
யேவண மானம தாகத்தன் சேவடி யேற்றுமணி
மாவ ணளகை யுமாவீர சேகர மாமணியே. (ருஉ)

உழவார மாவருட் சத்திகைக் கொண்டெம துட்பகையாம்
பழமா மலக்தெறல் காட்டியெ மப்பர் பணிபுரிந்த
தழகா ரதிகையென் றன்புசெய் நம்பியை யாளுமணி
மழவா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (ருங)

எறிபத்த ரன்பர்க் கடாதன நீக்கி யிதந்தரலே
யறிபத்தர் தஞ்செய றஞ்செய லேயென் றறிகுறியா
முறைபெற்ற மாமழு வங்கைக் களித்த முதமணிகைம்
மறி*பெற் றளகை யுமாவீர சேகர மாமணியே. (ருச)

ஏனாதி நாதர் திருநீறு தம்முயி ரென்றிரண்டை
யானாது தூக்கித் தமதுயிர் நீக்கி யருட்படையா
லூனா ணவப்பகை வென்றிட வன்றரு ளுண்மைமணி
வானா டளகை யுமாவீர சேகர மாமணியே. (ருரு)

கண்ணப்ப னெப்பதொ ரன்பின்மை கண்டபி னென்றதமிழ்
விண்ணப்ப வேத முடிக்குளவ் வன்புரு மெய்ம்மணியை
யெண்ணப் பதித்துவைத் தம்மணி கண்மணி யேய்ந்தமணி
வண்ணப் பளகை யுமாவீர சேகர மாமணியே. (ருசா)

உடலோம்பு நெல்லுயிர்த் தாலிதக் தேற்ப துயிர்க்குறுதி
திடனாஞ் சிவார்ச்சனைச் செம்பொரு ளேயெனத் தேற்றியசீர்க்
கடவூர்க் கலையர்மெய் யன்பினை நேர்நின்று காணுமணி
மடநா ளளகை யுமாவீர சேகர மாமணியே. (ருஎ)

---

*பெற்றவென்னும் - பெயரெச்சத்திறுதொக்கது.

அடியார்கள் வேண்டு மதுவெது வேனு மளித்தலென்றே
திடனுரு மானக்கஞ் சாறர் மகள்குழல் சேதிப்பித்தீந்
துடனு மிருளறுத் தொன்றருள் வாய்மை யுணர்த்துமணி
வடிவா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (ருஅ)

வாட்டாய ஞர்க்கொர் கமரே மன்ருக மலரருட்கை
நீட்டா வனுக்கிர கங்காட்டி மாவடு நேருண்ணெலி
தாட்டோய் சிலம்பொலி யாக்கேட்பித் தின்பமுன் றந்தமணி
வாட்டோ யளகை யுமாவீர சேகர மாமணியே. (ருகூ)

ஆனய ஞர்வங் கியத்தாற் பரவரு ளைந்தெழுத்தாற்
ருனே யவனுந் தனிவாழ் வருளுப சாந்தமணி
கானதி காரண மாமணி மாமணி கண்டமணி
வானு டளகை யுமாவீர சேகர மாமணியே. (சு0)

அயனு ரணர்கு மரிதேனு மன்புற் றகமொழிதன்
மயர்பா லெளிதென நம்பிமுன் சித்த வடமடத்திற்
சுயமே தொடர்ந்திரு காலிரு கான்முடி சூட்டுமணி
வயமா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (சுக)

முப்பகை முப்புர மாதிய நீத்தியன் மும்மையுணர்ந்
தொப்பி லருட்சிவ ராசாங்க மேவு முதுதெரித்தாங்
கிப்புவி மும்மையி னுண்மூர்த்தி யன்ப ரிதயமணி
வைப்பெம் மளகை யுமாவீர சேகர மாமணியே. (சுஉ)

இறைநூல் புகலு நெறியார் புகலுங் செனும்புகலூர்
மறையோர் மணிதிரு ஞானசம் பந்த மணிமகிழ்ந்தில்
லுறைமா முருக மணிமாலை சூட்டி யுவக்குமணி
மறைகூ றளகை யுமாவீர சேகர மாமணியே. (சுரு)

திருவைந் தெழுத்துயி ராக்கொ ளுருத்திரஞ் செப்பியப்பேர்
மருவும் பசுபதி யாகள மாமலர் வாவிநின்றே
யருளின் முழுகுதல் காட்டுமெய் யன்ப ரகத்துமணி
வருமன் றளகை யுமாவீர சேகர மாமணியே. (கச)

ஒருவாத் தியானநிட் டாபர ரென்பதிங் கோர்வித்தற்கே
திருநாளைப் போவ னெனப்பேசு வித்துச் சிதம்பரத்தே
யருண்மேனி சாத்தி யடிநீழல் சேர்த்தின் பருளுமணி
வருமா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (கரு)

அடியார் குறிப்புத் திருக்குறிப் பேய தனேகவித
முடனூர் தனக்கே யுணருந் திறத்த துணர்ந்துசெய்வார்
திடனூர் திருக்குறிப் புத்தொண்ட ரென்றவட் சேர்ந்தமணி
மடநூ றளகை யுமாவீர சேகர மாமணியே. (கசு)

வல்லான் வகுத்தது வாய்ச்சா லெனும்பெரு மாவழக்கே
யெல்லா முணர்ந்துஞ்செய் முப்பா தகமுஞ்சண் டீசபதஞ்
செல்லா வமர்கெனச் செய்யா நிறுத்துநந் தெய்வமணி
மல்லா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கஎ)

ஆறினு மூல முதலாச்செ லன்முறை யாமெனற்கோ
சேறிழுந் தும்பணி யாரூர்க்கு வாவெனச் சின்மயமெய்ப்
பேறரு டில்லையி னம்பிமு னும்பரிற் பேசுமணி
மாறி லளகை யுமாவீர சேகர மாமணியே. (கஅ)

மருணீக்கி யாரென வாகீச மோனியை வான்கயிலைக்
கிரிநீக்கிப் பூமி யுயநூக்கிப் பாழ்ஞ்சமண் சேறெற்கே
பொருணோக்கி யாங்குப் புகவுய்த்து மீட்டருள் போதமணி
வரனோக் களகை யுமாவீர சேகர மாமணியே. (கசு)

ஆவியுட் கன்மந் திரோதையைச் சேர்த்தி யனுபவிப்பித்
தோவுவித் தாட்செயல் காட்டிடச் சூலையென் ருென்றினையத்தே
நீவியச் சொல்லிறைக் காரரு ணல்கிய நேயமணி
மாவெம் மளகை யுமாவீர சேகர மாமணியே. (எ0)

தன்பாங் கிலையொரு துன்பே வையுமின்பத் தண்ணருளே
யென்பாங் கினைத்தா னவனுய நாவர சின்னிடத்தே
முன்பாங் கமணர் செயலா னிகழ்வித்த மோதமணி
மன்பாங் களகை யுமாவீர சேகர மாமணியே. (எக)

ஈன்ருளு மாயெனக் கெந்தையு மாயெனை யேன்றமணி
தோன்ருத் துணைமணி யென்றுசொல் வேந்தச் சுடர்மணிசொல்
சான்ரு மறைமணி மூன்ரு மொருமணி தாவின்மணி
வான்றே டளகை யுமாவீர சேகர மாமணியே. (எஉ)

நெடுநாட் பிரிவினை யாற்ரும லுள்ள நெகிழ்ந்துமன்றி
னிடைவாக் கரசினை யென்றுவந் தாயென வேன்றமணி
நடநோக்க வந்த தெனற்கே திருச்செவி நல்குமணி
மடநீக் களகை யுமாவீர சேகர மாமணியே. (எங)

இருதா ளிறைஞ்சித் திருமுன் னெழாமைகண் டெய்தவிரை
தருகாழி வாழ்வுகைக் கொண்டருட் பாவணி தன்னையணிந்
தருளா லமைத்த மணியாங் குலச்சிறை யன்புண்மணி
வருமா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (எச)

ஆரூரன் றன்னி லபேதனென் ருேர்ப்ப வவனியினுஞ்
சீரூ ரவன்ரு ளொருவாத் தியானச் செயலின்முன்னு
ளேரூர் கயிலை மிழலைக் குறும்பரை யேன்றமணி
வாரூ ரளகை யுமாவீர சேகர மாமணியே. (எரு)

பேயுரு வேட்டுப் பிறவாமை வேட்டுப் பிறப்பதுண்டேற்
றாயடிக் கீழ்மெய்ச் சுகம்வேட்டு மாயைத் தொடர்பகற்றெந்
தாய்மணி யற்புத வந்தாதி வாய்மணி சான்றமணி
வாய்மன் னளகை யுமாவீர சேகர மாமணியே. (எசு)

மெய்ப்பூதி யாந்திரு நாவுக் கரசெனு மேன்மனுவே
செப்பூதி யத்தாற் சிவானந்த வாழ்வு திளைத்தமரு
மப்பூதி தன்குஞ்சிப் பூவாய சேவடி யாத்தமணி
வைப்பா மளகை யுமாவீர சேகர மாமணியே. (எஎ)

அயவந்தி லிங்கத் திருமேனி யன்புமி ழாய்மனையின்
செயலன்று வர்த்த திருநீல நக்கர்முன் சிந்தைமகிழ்
நயனுந்து ரோம முகிழ்பொக் களமென்று நல்குமணி
வயமுந் தளகை யுமாவீர சேகர மாமணியே. (எஅ)

எல்லாமும் வல்லன் சிவனடி யார்களும் யாவுஞ்செய
வல்லா ரெனத்தெரித் தாங்கறன் மொண்டு மலிவிளக்கம்
வில்லார் தரச்செய் நமிநந்தி யாருள மேவுமணி
மல்லா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (எகூ)

தாமே சிவமெனுஞ் சான்றவர்ச் சார்ந்தவர் தங்குணம்போய்த்
தேமேவ லோர்ப்பப் புகலூரி னம்பி திருமுடிசார்
தோமேவு மிட்டிகை யாடக மாக்கிக் கொடுத்தமணி
மாமே வளகை யுமாவீர சேகர மாமணியே. (அ0)

இருக்கா தியசுப் பிரமணி யோமென் றியம்புமணி
யருட்காழி வாழ்வு கவுணியர் கோத்திரத் தந்தண்மணி
தெருட்கூர் தரப்புவிச் சேய்மணி யாவரச் செய்மணியெம்
மருட்கா யளகை யுமாவீர சேகர மாமணியே. (அக)

அருள்வாய் மலர்த்தமு தம்மே யப்பாவென் றவனியின்முப்
பொருள்கூட நோக்குதன் சேய்பால் விடைமிசைப் போந்துமையாற்
றெருள்பா லருத்துவித் தங்கண் டைத்தருள் செய்தமணி
மருடீ ரளகை யுமாவீர சேகர மாமணியே. (அஉ)

செயன்மேற் கொளுஞ்சிவ பாத விருதயர் செய்தவத்தா
லுயநோக்கிக் கால்குதித் தொண்பாத மத்தக யோகமுணர்த்
தியசேய்க்கு நேர்தளிக் குள்ளேக விண்ணினின் றேகுமணி
மயனீக் களகை யுமாவீர சேகர மாமணியே. (அங)

விழியாற் பதமல ராற்றீக்கை முன்புசெய் வித்திளஞ்சேய்
மொழியாற் றிருத்தோ டுடையசொற் றீக்கை மொழிவித்தன்பி
னொழியாத் திறற்சிவ பாத விதயர்க் குணர்த்துமணி
வழிகாட் டளகை யுமாவீர சேகர மாமணியே. (அச)

எட்டாத வேதமு மன்மைசொற் றேவிட் டிறைஞ்சுமணி
சுட்டா மணிதனைப் பெம்மா னிவனெனச் சுட்டித்தன்சேய்
சிட்டார் மலர்க்கர தீக்கையுஞ் செய்திடச் செய்மணிகான்
மட்டா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (அரு)

திருக்கோயில் புக்குச் சிவரூபங் காட்டுதன் சேயினைத்தன்
றிருத்தோ ளிடைச்சிவ பாத விதயர்கொள் செய்தியின்பத்
திருத்தோய் பரிசறற் றீக்கையென் றேசொலச் செய்தமணி
மருட்கா யளகை யுமாவீர சேகர மாமணியே. (அசு)

குறைநீக் கிடச்சிவ பாத விதயர் குருமணியாய்
நிறைதீக்கை செய்தருள் சேய்வீற் றிருந்தரு ணேர்பவனி
முறைகாட்ட முத்துச் சிவிகைமுன் னூங்கருண் மோதமணி
மறைபோற் றளகை யுமாவீர சேகர மாமணியே. (அஎ)

தனதீக்கை யாற்பக் குவம்வாய்ந்தற் றோர்செய றன்செயலே
யெனலோர்த் திடச்சிவ பாத விதயர்செ யாகத்துக்காம்
பொனைவேட்ட சேய்க்கா யிரம்பொன் கொடுத்தருள் போதமணி
மனநோக் களகை யுமாவீர சேகர மாமணியே. (அஅ)

நீக்கா வுடனின்று சஞ்சிதந் தேக நிகழ்வினைபின்
றாக்காது முன்னின் றியற்சிவ பாத விதயர்தம்பாற்
றேக்கா ரருள்புரி சேய்மணி தாய்மணி தெய்வமணி
மாக்கா னளகை யுமாவீர சேகர மாமணியே. (அகூ)

பணியே புரிந்து சரணடைந் தார்தம் பணிபுரியுங்
குணியா மணிபுகல் விண்ணப்பங் கேட்டுக் குறித்தவெல்லா
மணியா வியற்றிளஞ் சேய்பாடற் குள்ளுவப் பாகுமணி
மணியா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கூ0)

சேய்தாதை யென்ப துலகுக் கலாதுண்மை தேரினின்றென்
றேயாய் வுறப்புகன் மாதவர் மாதவற் கின்பமுத்தி
யாய்சா ருபநம சேயேபின் னுங்கட் கருண்மென்மணி
வாய்மா வளகை யுமாவீர சேகர மாமணியே. (கூக)

பிதுர்வாக்கை யோம்பு முறைகாட்டக் காஞ்சி பெருமணநற்
பதிமாற் கருளிப்பின் வேறருள் வீடுறு பண்பினுற்றோர்க்
கதிமோக்க முந்தரு சேய்மணி தூய்மணி யாய்மணி.வான்
மதிநோக் களகை யுமாவீர சேகர மாமணியே. (கூஉ)

ஒருதான் புரிசெய லெல்லா வுலகுப காரமென்றே
யருளு லுரைத்தல்கண் கூடாத் திருக்கலி யாணத்தந்நாள்
வருவா ரெவர்க்கும் பெருவாழ் வளித்த மணியுண்மணி
வருவா னளகை யுமாவீர சேகர மாமணியே (கூகூ)

ஆரூரர் மாண்புணர்ப் பானேயர் கோன்கலிக் காமர்க்கந்நா
ளோரூர் பிணிதெறத் தீர்த்தருட் டேக முதவுவித்தே
சீரூ ரடிய ரறிவரி யாரென றேற்றுமணி
வாரூ ரளகை யுமாவீர சேகர மாமணியே. (சுச)

திருமூல யோகி திருவாயி னின்றுந் திருவருள்சேர்
திருமூல மாகுந் திருமந் திரச்சொற் சிவானந்தமெய்த்
திருமூல மாமணி மாலை தருமணி செம்பொன்மணி
வருமூ தளகை யுமாவீர சேகர மாமணியே. (சுரு)

பிரபஞ்ச நோக்கிற் குருடாய்ச் சிவத்துவப் பேற்றினென்று
மருவுங்கண் கோடி யுளார்பெரி யோரெனு மாண்புணர்த்த
வருமெந்தை தண்டி யடியாற் சமணிருண் மாற்றுமணி
வரமொன் றளகை யுமாவீர சேகர மாமணியே. (சுசு)

குற்றங்க ணீக்கிக் குணமுறுத் தோம்பல் குணமென்றுயிர்க்
குற்றங்கட் சூதினின் மாறினர் தோட மொறுத்தொழித்தே
முற்றுங் கருணை புரிமூர்க்க ருள்ள முதமணிசீர்
மற்றங் களகை யுமாவீர சேகர மாமணியே. (சுஎ)

சோமாசி மாறர் செயுமக மேமகஞ் சொற்றதுண்மை
யாமா மெனமறை யாகம நந்திக ணுதிபர்சே
யோமா முகனுமை யோடவி கொண்டரு ளோகைமணி
வாமா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (சுஅ)

செயலேதுஞ் சிவருக் கின்மையுந் தான்மெய்ச் சிவமலதொன்
றயலோர்வி லாமையுந் தேற்றமுன் வேட்டபொன் னுங்களித்தே
பெயலார் முதுகுன்றி னம்பிசொல் பாவுட் பிறங்குமணி
லயலா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (சுகூ)

எங்கே யிருப்பினு மெய்கண்ட ஞானியர்க் கேதிலைமற்
றங்கேநம் பூசனை சைவசந் தாபன மாகுமென்றே
யிங்கேயுஞ் சாக்கிய ரானன் குணர்த்து மிறைமணியார்
வங்கூ ரளகை யுமாவீர சேகர மாமணியே. (க00)

உயிராற்ற லின்மை தெரித்தாங் கெழுத்தைந்து மோதிமகச்
செயல்போற்றி மெய்யன்பர் பூசனை யாற்றித் தினந்தினமப்
பயன்மேற் சிறப்புலி யார்தன் னிடந்தரப் பண்ணுமணி
மயல்பாற் றளகை யுமாவீர சேகர மாமணியே. (க0க)

ஒன்றுமி லாதவ ரென்றே மறைமுடி யோதுதன்பா
லொன்றுமி லாதுறு கென்ற சிறுத்தொண்ட ரொண்பொருண்மற்
றொன்றுமி லாமைமுன் செய்துடன் கூட்டியின் பூட்டுமணி
மன்றங் களகை யுமாவீர சேகர மாமணியே. (க0உ)

வன்றொண்டர் பாட றனைவச மாக்கொளு மாண்புணர்த்தற்
கொன்றுஞ் சிலம்பொலி தாழ்த்துடன் கேட்பித் துவந்தமணி
யென்றன் குருமணி யென்சேரர் முன்செல வேற்றுமணி
மன்றங் களகை யுமாவீர சேகர மாமணியே. (க0௩)

திடன்சார்ந்த பல்பணித் தொண்டரை யாக்கிச் சிவகணமாக்
கிடுஞ்சால் பினுற்கொள் பெயரா மெனக்கண நாதரென்பே
ருடன்காழி மாநக ருற்று ரிதயத் தொளிருமணி
யடஞ்சா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (க0௪)

பாரா ளரசரு ளேமுடி மேற்கொடு பாலிப்பதே
சீரா மெனத்தெரிப் பான்வேண்டு கூற்றுவர் சென்னிமுடி
யோரார் திருவடி யேயெனச் சூட்டி யிலக்குமணி
வாரா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (க0௫)

அருள்கூட் டுவகை விடினும் விடாதுயிர்க் காயநுகர்
பொருள்வீட்டி னுங்கை தருமூ ழெனநம்பி பொன்விரைசெல்
வெருளாற்றி விட்டுக் குளத்தெடுப் பித்து விளக்குமணி
மருள்வாட் டளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௦௬)

இயற்பைந் தமிழற் புதத்தை விகங்லைத் தென்பதனை
நயப்பொய் யடிமையில் லாப்புல வோர்மணி நாப்பண்மணி
வியக்குமுச் சங்கந் தருமணி யாகி விளக்குமணி
வயற்பொன் னளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௦௭)

உய்வாய சைவ நெறிச்சார் பருமை யுலகறிய
வெய்யாமெய் யன்பினை வாளா லளந்திட் டிறைஞ்சிநின்றே
மெய்வாழ் வுறுபுகழ்ச் சோழ மணிமுன் விளங்குமணி
மைவா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௦௮)

பொருளோ ரிரட்டி கொடுப்பித்து வேடங்கொள் பொய்த்தவர்க்குத்
திருவேட மேசிவ மொன்றே தெரியுந் திருவிழியா
ரொருவா விறனர சிங்க முனையரென் றோர்க்குமணி
வரமே வளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௦௯)

அன்பாம் வலையுளொன் றேயருள் வாரி யகப்படுவ
தென்பாங் குணர்த்த வதிபத்தர் வாரி யெறிந்தவலை
யின்பாலொர் மீன்மணி யொன்றாகி யீர்த்திடு வித்தமணி
மன்பா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௧௦)

கருவேரைத் தான்றடிந் தன்பர்க்கின் பூட்டுதல் காட்டுதல்போ
லொருமா மனைகை மணிபந் தறத்தடிந் துண்ணமுதந்
தருமாசி லன்பர்க் கருள்கலிக் கம்பர்சிந் தாமணிசீர்
வருமா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௧௧)

பெருவாழ் வெனப்பல் விளக்கேற்று தொண்டினைப் பேணிநின்று
தருமா மனைபணி தூக்கா வதிக தரந்தணிந்தே
யொருமா மனைவிலை கூறுங் கலியர்பெற் றுய்யுமணி
மருவே யளகை யுமாவீர சேகர மாமணியே. (கக௨)

நிந்தாதி கஞ்சிவ நிந்தாதி செய்தவர் நீச்சமில்லா
தந்தோ நலிவ ரெனநாக் கரிந்தொழித தாரருட்கோர்
சிந்தா யமர்சத்தி நாம மணியுளச் சேமமணி
மைந்தா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கக௩)

காமாதி வீட்டி யருளோஇ யடிகணங் காடவர்தங்
கோமா னுளவில பாத்தருண் ஞானங்கொடுத்தருள்வெண்
பாமாலை ஞான மணிமாலை சூட்டிப் பரவுமணி
வாமா னளகை யுமாவீர சேகர மாமணியே. (கக௪)

தானுள் கணத்தவர் தன்மயர்க் கேவல்செய் சால்பினையிங்
கானு வெழிற்குண் டையூர்ப்பெறு நெல்முழு தட்டித்தர
மேனு வனம்பி மனைக்கவர்த் தூண்டி விளக்குமணி
வானு டளகை யுமாவீர சேகர மாமணியே. (கக௫)

விளக்கேற்றி னார்பலன் மெய்ந்நெறி ஞானமென் வேதத்துண்மை
திளைத்தார் கணம்புல்லர் சென்னியிற் றேன்றெளி யேசிசையின்
விளக்காக நேர்வந் துடனுமெய் வாழ்வருண் மேதைமணி
வளக்கா னளகை யுமாவீர சேகர மாமணியே. (கக௬)

சேவார்ந்த சேவடிச் சேர்வே திகழச் செறித்துட்பொருண்
மூவேந்த ரோகை கொளப்பாடி வாங்கியு முற்றுமன்பர்
தேவார்ந்த பூசைக் கருள்காரி வாய்மலர் செப்புண்மணி
மாவோங் களகை யுமாவீர சேகர மாமணியே. (கக௭)

அனன்மா புனலிரண் டாதியி னுலுஞ்சுத் தாத்துவித
கனமேவு சைவம் விளக்கா வகித்ததன் காரணமா
யினமா மணிநெடு மாற மணிக்கரு ளீந்தமணி
வனமே வளகை யுமாவீர சேகர மாமணியே. (கக அ)

அன்பா ரமுதஞ் சிவானந்த மஞ்சன மைந்தெழுத்தாம்
பொன்பீடந் தாரக வாசிகை தீபமெய்ப் போதமுற்கொண்
டின்பூசை நாளுஞ் செயும்வாயி லார்மனக் கேய்ந்தமணி
மன்பா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (ககசு)

தொழிலே தியற்றியு மூதியங் கொண்டுமெய்த் தொண்டர்க்கென்று
மொழியாத பூசை செயலே யுறுதியென் றோர்க்குமன்ப
ரழியாத மர்த்த முனையடு வாருள் ளகுப்பொன்மணி
வழியா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கஉ0)

தனக்காற்று தொண்டள வுட்படல் போலன்று தான்மெயன்ப
ரினக்காற்ற லித்திற மென்பது மின்றருளென்பநம்பி
மனக்காதன் மாமனைத் தூதாளு மாகி வயக்குமணி
வனக்கா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (கஉக)

திருமூக் கரிந்தவற் கண்டங்கள் யாவுந் திரண்டுறினும்
* பொருவீட் டுதுமென் றுணர்ந்துகை வாங்கிப் புராரியன்பர்க்
கரிதேற்ற லின்றெனக் காட்டுங் கழற்சிங்க ரன்புண்மணி
மருணீக் களகை யுமாவீர சேகர மாமணியே. (கஉஉ)

கொலையே தருகள வாற்றவு நீற்றுமெய்க் கோலங்கண்டந்
நிலையேபண் டாரந் திறந்தன்பர் கொள்கென நேர்ந்தெவர்க்குஞ்
சொலைநீட்டி நல்கு மிடங்கழி யார்க்கரு ளேமணி
மலைமே வளகை யுமாவீர சேகர மாமணியே. (கஉங)

---

* பொருது-பொருவென வீறு குறைந்து நின்றது.

ஓவா துடற்றுஞ் சிவமாது ரோகங்கண் டாலுடனே
மூவா தறச்செயன் மாவற னென்றலர் மோந்துளமூக்
காவீர் செருத்துணை யார்மலர் மாலை யணியுமணி
மாவா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கஉச)

அற்காசு வாங்கி யருட்கா சளித்துமெய் யன்பர்க்கென்ப
தெற்காசு மாற்றும் புகழ்த்துணை யாரிடை யென்றுணர்த்தப்
பொற்காசு நேர்ந்த படிக்காசு நல்குமெய்ப் போதமணி
மற்கா சளகை யுமாவீர சேகர மாமணியே. (கஉரு)

தெறுகோட் புலியி னுரிகோட் புலிங்கக்கட் டேவினெல்லைப்
பெறுகோட் புலிதன் திறுகோட் புலினது பேருமென்றே
யுறுகோட் புலிசெய் கறைவாட் கொலைகண் டுவந்தமணி
மறுவீட் டளகை யுமாவீர சேகர மாமணியே. (கஉசு)

தானு யவரைந் தொழிலாதி யானையிற் முஞ்செயுண்மை
யேனோருங் காணக் கராங்கவர் சேய்தர லேமுதலாம்
பானே ரருணம்பி யாரூரர் வாய்மைப் பதிகமணி
வானே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கஉஎ)

இறைபோ லடியரு மெண்குணத் தாரென் றியம்பற்கறி
குறியாகத் தொண்ட ரடித்தொழ லாதி குணமொரெட்டுஞ்
செறிவாய்மை யார்பத்த ராய்ப்பணி வார்தஞ் சிரமணிநான்
மலறகூ றளகை யுமாவீர சேகர மாமணியே. (கஉஅ)

நின்றே நடந்துங் கிடந்துமெப் போது நிகழ்பணியீ
தொன்றே யொழியாத் தியானம தாயுடன் கூட்டுநெறி
யென்றே பரமனைப் பாடுமெய் யன்பர்க் கியைந்தமணி
மன்றே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கஉகூ)

முட்டாது சித்தஞ் சிவன்பாலில் வைத்தன் முதுக்குறைந்தே
விட்டோர் சுழுனை நெறிபோய்ச்சுத் தாத்து விதப்பெருவாழ்
வுட்டோய்த்த லென்றுணர்த் தெம்பெரு மக்க ளுணர்வுண்மணி
மட்டா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கஙௐ)

கணநாத ராகிமுன் கைலாய வாழ்விற் கலப்புறுமெண்
குணநாத ரென்றரு ளாரூர்ப் பிறந்தவர் கோலமெல்லா
மெணநேர் நமிநந்தி முன்காட் டியமணி யெண்டிசையு
மணநீ டளகை யுமாவீர சேகர மாமணியே. (கஙக)

பஞ்சா னனத்த முனி * கோ சரத்துற் பவித்துலகுக்
கெஞ்சா தருளமுப் போதுமெப் போது மிறையுருவே
தஞ்சாகத் தீண்டிச் சிவானந்த மூழ்குநர் தம்முண்மணி
மஞ்சா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கஙஉ)

முப்பாற் றிருமுழு நீறுமெய்ப் பூசுபு முக்குணமுன்
னெப்பாற் பழுதுங் களைந்தே சிவானந்தத் தெய்திநின்றே
யிப்பார் வழுத்த வமர்ந்தா ரிதயத் திலங்குமணி
வைப்பா மளகை யுமாவீர சேகர மாமணியே. (கஙங)

அடைவா ரடைந்தா ரடைகின் றவரென் றடியர்பல்லோர்
நடைவாய்முக் காலத் தவரென நம்பிசொ னற்றமிழ்ச்செந்
தொடைவாயப் பாலு மடிச்சார்ந் தவருளத் தூயமணி
மடைவா யளகை யுமாவீர சேகர மாமணியே. (கஙச)

தானோர் குடிலையிற் றன்போன்மெ யன்பருஞ் சார்வரென்ப
தேனோருங் காணப் பிரணவ வெள்ளிபத் திந்திரன்மால்
வானோர் பணிந்திவர் வித்துறு நம்பியை வாவென்மணி
மானே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கஙரு)

---

* கோசரம் - கோத்திரம்.

மனக்கோயி லிப்பு வனக்கோயி லென்றிரு மாதளிக்குட்
கனக்கோயின் ஞான வனக்கோயி லாய கருதுதளி
யெனக்கோயில் கொண்டு திருப்பூச லாருள் ளிலங்குமணி
வனக்கோ வளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௩௬)

சேய்மானி யென்று திராவிட வேதஞ்சொல் செம்மணியெந்
தாய்மானி யென்னும் பெயர்யோக ரூடியிற் சார்மணிநூ
லாய்மானி கண்மணி பெண்மணி தண்மணி யன்புண்மணி
வாய்மா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௩௭)

அருணூல்க ளன்பு சிவமே யெனலினவ் வன்புருவோ
பொருளா நிறைசிவ மோவென் றிரண்டன் பொதுப்பெயராத்
தெருள்கூரு நேசப் பெயர்மா மணியின் சிரமணிவான்
வருமா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௩௮)

உருவே துறினும் பணியே தியற்றினு மோவிலன்பே
பெருவாழ் வளிப்ப தெனநூல்செய் வாய்ச்சிலம் பிக்கரசீந்
தொருவாத கோச்செங்கட் சோழர்செய் கோயில்கொண் டோங்குமணி
வருவா னளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௩௯)

மறைச்சுரம் போலள வுட்படு மேனு மறைவடித்த
நிறைத்தென் மறைப்ப ணளவா வதீத நிலைமைத்தென்றே
நிறத்திரு நீலகண் டப்பெரும் பாணரிற் றேற்றுமணி
மறைச்சொல் லளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௪0)

அகலா தரிய தவமேற் புரிந்தமெ யன்பருள்ளே
திகழ்மா மணிசுந் தரமணி சம்புத் திரமணியாத்
தகைசால் சடைய ரிசைஞா னியார்க்குத்தருமணிமா
மகமே வளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௪௧)

தன்னாணை யின்றெனுந் தானுந் தடுப்பருஞ் சால்பிற்றன்பர்
பொன்னாணை யென்றுணர்ப் பான்சேரர் தாரப் பொறைப்புறநின்
றன்னா ளருணம்பி யாலகத் தேக வருளுமணி
மன்னா ளளகை யுமாவீர சேகர மாமணியே. (கசஉ.)

சீரார் தமிழதி மாதுரி யார்த்தச் சிறப்பிற்றதி
லாராத காத லுடையமென் றோர்ப்ப வருட்கயிலை
யேரா ருதிய ருலாத்தமிழ் நூல்செவி யேற்குமணி
வாரா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கசரு)

தன்னேர் கயிலை மலைசார் தனதன் றரணியினின்
பொன்னேர் சிவதல மாண்பரு ளாயெனப் போற்றிநின்று
முன்னே ரிரப்பம ளுங்காங்குப் போந்து மொழிந்தமணி
மன்னே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கசசு)

தலமாண்பு சேட்டங் குடன்சார் தனதன் றலங்களின்மிக்
கிலகாதி காவிரிப் பூம்பட் டினத்திரு வீர்ப்பநின்றே
விலகா தமர நராணுதி யென்று விளம்புமணி
வலமா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கசரு)

எளியேன் பிழைபொறுத் தாள்கென் றனதற் கிரங்கியொப்பி
லொளியேய் புகார்வணி கோத்தம ளுதி யுனக்குடனின்
றளியே தருது மகவாய் வருதுமென் றுற்றுமணி
வளமே வளகை யுமாவீர சேகர மாமணியே. (கசசூ)

திருவாருங் காவிரிப் பூம்பட் டினத்திற் சிவப்பிரிய
ரருளாரு ஞான கலாம்பை யிருவ ருந்தவத்தின்
பெருவாழ் வெனவரு வெண்காடர்க் காரருள் பேணுமணி
வருவா னளகை யுமாவீர சேகர மாமணியே. (கசஎ)

ஐயாண் டொழித்த தவமென் றலமந் தழலினிட்ட
நெய்யா யுருகி யுடனிலை யான்ம நிலைமைபதி
மெய்யாய் நிலையுணர் வெண்காட ருண்மிளிர் விண்மணிகாண்
மையா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கசஅ)

அருள்காட்டி னன்றியின் றூரருள் கூட்டிரண் டற்றவின்பப்
பெருவாழ்க்கை தீக்கை சிவார்ச்சனை யன்றியப் பேறிலையக்
குருவாய்ப்ப தென்றென் றவாவவெண் காடர்க் குழைத்தமணி
மருள்வாட் டளகை யுமாவீர சேகர மாமணியே. (கசகூ)

மனமே குலைந்தொ ரிரவுந் துயிலை மறுத்தயர்விற்
பனநேரில் பட்டினத் தார்கன வுற்றுப் பரிவுறல்பிற்
றினமேவெண் காடுசெல் கைகூடு மென்றருள் செய்யுமணி
வனமே வளகை யுமாவீர சேகர மாமணியே. (சரு௦)

புலியூர்ச் சிவமா மறையோர் சிகாமணி பூண்கனவி
னலனூர்வெண் காட்டில்வெண் காடர்க்குத் தீக்கை நவிற்றியிந்தக்
குலனூர்பொற் சம்புடக் கோயிலு மீகெனக் கூறுமணி
வலனூ ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கருக)

வெண்காடற் கன்றித் திறவாதிச் சம்புடம் வேறெவர்க்குந்
தண்காண் படிக விலிங்கங் கணேசனைத் தந்தவற்கே
யெண்காண் சிவார்ச்சனை யாற்றவுந் தேர்றென் றிசைத்தமணி
வண்கா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (கருஉ)

கனவோதி யன்னை யுடன்போய்வெண் காட்டிற் கடிதருண்மேன்
மனமேவ முக்குளத் தாடுபு கோயின்முன் வந்துதொண்ட
ரினமார்வெண் காடர்செய் விக்குமன் பூசனை யேற்றமணி
வனமா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கருங)

எனையாளு மீசன் கனுநன வாவந் திசைத்தவுண்மை
தனையா னடையக் குருநாதன் போந்திவட் சாருமென்றே
யனையோடும் பட்டினத் தார்நோற் றிருப்ப வருளுமணி
மனையா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கருச)

வெண்காடர் யாண்டைய ரென்றேயக் கோயிலவ் வேதியர்கோன்
கண்காணப் பட்டினத் தார்தாழ்ந் திறைஞ்சக் கலந்தருளிப்
பண்காணுஞ் சம்புடக் கோயி றிறப்பிக்கப் பண்ணுமணி
வண்கா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (கருரு)

திலைவே தியரொண் சுவேதா ரணியச் சிவாலயத்து
ளலைவே நகற்று சிவதீக்ஷை யாற்றிவெண் காடர்க்கன்பி
னிலைவேறில் பூசனை செய்முறை தேற்ற நிகழ்த்துமணி
மலைமே வளகை யுமாவீர சேகர மாமணியே. (கருசா)

ஆன்மார்த்த பூசனைப் பேற்றுன் மகேசுர ரர்ச்சனைசெய்
வான்மாற் பொருளனை யாலின்மை தேர்ந்து வருந்தியுறைப்
பான்மாற்கொள் பட்டினத் தார்வேட்கை முற்றருள் பண்ணுமணி
மான்மாற் றளகை யுமாவீர சேகர மாமணியே. (கருஎ)

தன்னு ரருளி னுலவா நவநிதி தான்பெற்றன்பர்
பொன்னுண் மலரடிப் பூசனை யாதி புரிந்துவப்பா
னன்னாள்வெண் காடருக் கின்னரு ளேதரு மங்கண்மணி
மன்னு ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கருஅ)

அருளார் சிவார்ச்சனைப் பேறுதந் தாடில்லை யந்தணமெய்க்
குருநாதன் மேனிபொன் போர்த்தருச் சித்தருள் கொண்டவனுங்
சொருவா தமரவெண் காடர்கொண் டின்புற வூட்டுமணி
வருமா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (கருகூ)

உலவா நவநிதி யர்ச்சனை யாற்றி யுவற்றினென்றும்
பலவான் சிவதன்மம் பூசனை நாடொறும் பல்கச்செய்து
நிலவா வகிலமும் வெண்காடர் பேருற நீட்டுமணி
வலவா னளகை யுமாவீர சேகர மாமணியே. (சசுo)

* குரவோர்வெண் காட ரெனும்பேரின் மேலுங் குவலயத்தோர்
தரநீள் பிரபுத் துவமாதி பற்பல சால்புகுறீஇப்
பரவாரும் பட்டினத் தாரென வோதவும் பண்ணுமணி
வரமா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கசுக)

தினந்தோறு நெஞ்சமுந் தஞ்செழுத் தோதல் சிவார்ச்சனைமுற்
கனந்தோய் சிவநிய மம்பல வாற்றுசற் கன்மமுற்று
மனந்தூய்வெண் காடர் மணத்தனைக் காதர மாட்டுமணி
வனந்தோ யளகை யுமாவீர சேகர மாமணியே. (கசுஉ)

அனையா தரத்தின் மணமப் புகாரிற்செய் தன்புருவம்
மனையாய் சிவகலை யோடில் லறத்தும் வழாமுறைநின்
றெனையாள்வெண் காடர் மகவாதற் காஞ்செய லெண்ணுமணி
வனையா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கசுங)

திருவா ரிடைமரு தூர்ச்சிவ சன்ம சிவத்துவிச
ரொருவாமெ யன்பிற்செய் மாசேசு ரார்ச்சனைக் கோங்குபொருள்
வருவாய் குறைத்தவ ரன்புல கோர்க்கு வயக்குமணி
மருவா யளகை யுமாவீர சேகர மாமணியே. (கசுச)

ஆன்மார்த்தத் தோடு பரார்த்தார்ச் சனைதின மன்பிற்செய்யு
மேன்மார்க்கம் பூண்சிவ சன்மர்மெய் யன்பை வெளியினுமுன்
பான்மார்க்க மேன்மனைச் சென்றுருங் குண்டருள் பண்ணுமணி
மான்மாற் றளகை யுமா ர சேகர மாமணியே. (கசுரு)

* குரவோர் - தாய் தந்தையர்.

பின்னாளு முன்னுண்ட பேராசை யுந்தப் பெருமனைச்சென்
றின்னா ரமுதுண் டடன்சார் சிவசன்ம*ரிற்கிடஞ்சார்
பொன்னா ரருளினி லன்னுதி யோங்கப் புரிந்தமணி
மன்னே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கசுரு)

அருளாற் பெறல்கொண் டடியாரைப் பேணி யருந்ததிக்குந்
தெருளாற்று தன்மனை வேட்கைமுன் னேக்கு சிவசன்மர்க்கப்
பொருள்கூட்ட னின்மக வாதும்வில் லென்று புகன்றமணி
மருள்வாட் டளகை யுமாவீர சேகர மாமணியே. (கசுஎ)

அந்தோ நினையும் விலகூற வோபொரு ளாசைகொண்ட
தெந்தா யெனச்சிவ சன்மாவஞ் சேல்பட் டினைத்தன்பற்று
முந்தோர் மகவாய் வருதுமென் றேமது முற்றென்மணி
மைந்தா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கசுஅ)

அன்பாள ராஞ்சிவ சன்மா கனுவி லருளியவா
றின்பா ரிடைமரு தூர்க்கரு ணமுத வின்றடப்பாற்
பொன்பா யொளிமெ யிளமக வாகிப் பொலிந்தமணி
மன்பா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கசுகூ)

கருணா முதத்தடஞ் சார்சிவ சன்மர்தங் காதலியோ
டொருவா வுளத்தன் பிருமத கூடுற லொப்பக்கண்ணீர்
பெருவாழ்வு பெற்றனம் பெற்றேமென் றாடப் பிறங்குமணி
வருவா னளகை யுமாவீர சேகர மாமணியே. (கஎ0)

அருகோடி யங்கைக் கடங்கா தெடுத்தணைத் தானந்தத்தா
லிருகா விறைஞ்ச வயர்த்தார் சிவசன்ம ரில்லிரண்டு
குருகார் மலர்க்கைக் கொடுத்துவப் பாகிளங் கோலமணி
வருவா னளகை யுமாவீர சேகர மாமணியே. (கஎக)

---

* இல் - மனைவி.

பொருளேன் பிறவரி முன்றுமெத் தேவரும் போற்றுமப்
பொருளே யெமக்கோர் பொருளாயங் கையுறிற் போய்ப்பெறமேற்
பொருளே தெனச்சிவ சன்மா மனைசொலப் போந்தமணி
மருள்கா யளகை யுமாவீர சேகர மாமணியே. (கஎஉ)

எவ்வாழ்வு பெற்றன மிம்மக வாலினி யென்பெறுவ
பொய்வாழ் பொருளைப் பெறவோவிப் பொன்னையும் போய்க்கொடுப்ப
தொவ்வே னெனச்சிவ சன்மா மனைகொண் டுறுமணிகாண்
மைவா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கஎங)

அன்பா லுரைத்தி யணங்கே யெமைய்ய னருள்மறுப்பின்
னென்பா லுறுங்கொ லெமைநீங்கி யிம்மக வேகிற்செய
லுன்பாலென் றுங்கொ லெனச்சிவ சன்ம னுரைக்குமணி
மன்பா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கஎச)

ஒருவா றுளத்தைச் சிவசன்மன் றேற்றி யுபாயத்தினால்
வருவான்வன் காவிரிப் பூம்பட்டினத்தின் மனையொடும்போய்த்
திருவாரும் பட்டினத் தார்மனைப் பாங்குறச் சேர்ந்தமணி
வருவா னளகை யுமாவீர சேகர மாமணியே. (கஎரு)

அருளாரும் பட்டினத் தார்கன விற்புகுந் தன்பரிற்கோர்
பொருளா யுறநின் மனைப்பான் மறையவன் போற்றவுற்றேம்
வெருளேல் சமனிறைப் பொன்றாற்கொள் ளென்று விளம்புமணி
மருள்கா யளகை யுமாவீர சேகர மாமணியே. (கஎசு)

அன்னாள்வெண் காடர் சிறியேற்கெம் மானரு ளாயதென்னென்
றுன்னு வுணர்ந்தம் மறையோ ரிசைவி னுறுதுலையிற்
பொன்னேர் தரத்தரத் தன்றட்டுத் தாழப் புரிந்தமணி
மன்னே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கஎஎ)

என்னே தராசிடு மெல்லாமுங் கொண்டெழு மெப்படியு
முன்னோர்சொன் மாறின் றிடலே முறையெனு முன்னநிறூஉந்
தன்னேர்வெண் காட ரிடுந்தோறுந் தன்றட்டுத் தாழ்த்துமணி
மன்னே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௭௮)

ஒருவாத பட்டினத் தார்செய லோர்ந்தெம் முடையவவிப்
பொருள்போதும் போது மறியா திரந்த பிழைபொறுத்தே
சரியா மெனச்சிவ சன்மா விரப்பச் சமன்செய்மணி
மருள்கா யளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௭௯)

அயனு ரணற்கு நிகமா கமக்கு மளப்பருஞ்சின்
மயனும் பட்டினத் தார்யாருங் காண மகிழ்ந்திடுங்கோ
லுயநேர் தராசிடும் பொன்னள வாநின் றுவக்குமணி
வயனே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௮௦)

தன்கோ வணக்கே யமர்நீதி யார்சொஞ் சரியின்றென்ப
வென்கோன்வெண் காடர் பொருளள வாய்நின்ற தென்புகல்கேன்
நன்கோர் வரிய தெனச்சிவ சன்ம னயக்குமணி
மன்கோ வளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௮௧)

தன்னேர் கனவில்வெண் காடநின் சேயெனச் சார்துமென்று
மன்னு ளிறைவிம் மகவென வோர்வ தயர்வித்தன்பா
லென்னேர் மகவெனப் பட்டினத் தார்கொள வெய்துமணி
மன்னே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௮௨)

அருமா தவஞ்செய் தளித்தநுஞ் சேயென் னருமகவாய்
மருமேனு நாம கரணுதி நீர்செயு மாண்பிற்றென்று
திருவார்வெண் காடர் சிவசன்மர் பாற்சொலச் செய்யுமணி
வருவா னளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௮௩)

பெற்ருர்தஞ் சொற்படி யேசிவ சன்மப் பெருமறையோ
னற்ரு கெனநற் றினத்தா ரணிகொள வன்பர்முன்னோர்
றற்ருளைக் கூற மகாலிங்க நாமமுன் சூட்டுமணி
மற்றே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கஅச)

நிறையார் பொருள்சக டத்தேற்றிக் காப்பு நிறுவிப்புகார்க்
கிறையோ ரிரதந் தரநேர் விடைபெற் றிடைமருதூர்
மறையோன் றனைப்பிரி வாற்ருமைக் காரருள் வைக்குமணி
மறைகூ றளகை யுமாவீர சேகர மாமணியே. (கஅரு)

தேர்மே லயர்ந்து செலுமறை யோன்முனஞ் சென்றெனையிப்
பார்மேன் மறந்துசெல் பான்மையென் னென்று பகர்ந்தமணி
நார்மே லவன்மனை யோடுகெண் டின்புற நல்குமணி
வார்மே வளகை யுமாவீர சேகர மாமணியே. (கஅசு)

கண்டா ருவகைக் கடன்மூழ்கி யெம்மிரு கண்மணியே
வுண்டோ விலையென் றுயிரோட வாடின முய்யவருள்
கொண்டே கினையென மாதொடும் வேதியன் கூறுமணி
வண்டே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கஅஎ)

இருவோருந் தேரி னிடைத்தம் மிடையணைத் தின்பவெள்ளத்
தொருவா தனந்த லுறத்தான் மறைந்தவ ரூர்மனைப்பால்
வருதேர் நிலத்தலுங் காணுச் சிவசன்மர் மால்கொண்மணி
மருவா னளகை யுமாவீர சேகர மாமணியே. (கஅஅ)

அறிவே யிழந்து பலவா நினைந்தங் கவசமுறு
மறையோ னெதிர்ப்பட் டினத்தார் மதித்து வரவிடுத்த
நிறைகா வலர்முன்புகுந்தோலகை கூற நிசழ்ந்துமணி
மறைகூ றளகை யுமாவீர சேகர மாமணியே. (கஅகூ)

மறையோய் நினக்கெ மிறையோர்வெண் காடர் மகாலிங்கத்தி
னிறையேர்ப் படம்பொன் முடங்கலு மீந்தனர் நீயிவைகொண்
டிறைமீ கெனப்புகல் வித்தாங் கவர்க்கின்ப மீட்டுமணி
மறைகூ றளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௯0)

பொருள்கா வலர்பாற் பொருள்படங் கொண்டிறை போக்கியொப்பி
லருளார் படஞ்சிரங் கொண்டுகண் ணொற்றி யகமகிழ்ந்தே
தெருளாதி சைவ சிவசன்ம ரன்பினுட் சேருமணி
மருள்கா யளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௯௧)

படமா விலிங்க மழரூப சேகர பாதம்வரைச்
சுடர்மேனிப் பேரெழில் கட்கடங் காமனஞ் சொற்கடங்கா
திடமார் தரச்சிவ சன்மரன் பானெகிழ்ந் தேத்துமணி
வடமா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௯௨)

படம்பூசை மண்டபத் தின்மணி பீடத்தின் பாங்கமைத்தன்
படங்கா தணிந்தருச் சித்தமைத் தேயுளத் தவ்வுருவந்
திடங்கூர் சிவசன் மனார்சிவ யோகிற் றிளைக்குமணி
மடங்கா யளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௯௩)

தாதா யகிலமுந் தாயேயென் றேவிடுந் தன்மை நின்றுந்
தாதா யனையெனத் தான்போந்து பட்டினத் தார்தமைப்பூந்
தாதார் குழலி சிவகலை யம்மையைச் சாற்றுமணி
மாதா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௯௪)

பலவாய வண்டப் பகுதியிற் சீவருண் பானமுத
நலமா யருள்பதி தானும் பட்டின நாதரில்லிற்
பொலனார் மணிக்கிண்ணப் பாலமு தண்டு பொலியுமணி
வலனா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௧௯௫)

செங்கீரை யாடி யணிமீ தமர்நின் றிருவுருவ
மிங்கேகண் காணக் கிடைத்தில தேயென வேக்கறவே
யங்கோர் வருட மகவாய்வெண் காடர்க் கருண்மணியார்
வங்கூ ரளகை யுமாவீர சேகர மாமணியே. (கசுசு)

தாயே யுறங்க தனியே யுறங்க தனித்திடுமெஞ்
சேயே யுறங்க வுறங்கவென் றோதிச் சிவகலைதன்
றூயார் மலர்க்கரந் தொட்டாட்டு தொட்டிலிற் றூங்குமணி
வாயா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (சகூஎ)

தேனே தெளிந்த வமுதே யெமது திரவியமே
மேனே ரரிய தவமே தவவிளை வேயெனக்கண்
மானேர் சிவகலை தாலாட்ட வங்கண் வளருமணி
வானே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (சகூஅ)

இணைக்கா லரிக்கு மொளித்துஞ் சிவகலை யெய்தருஞ்சீர்க்
கணைக்காற் கிடத்திக் குளிப்பாட்டிச் சுண்ணங் கதிர்த்தயிற்றி
யணைக்காற் றுயிற்றிடத் தாலாட்டல் கேட்டின் படையுமணி
மணக்கா னளகை யுமாவீர சேகர மாமணியே. (சகூகூ)

எப்பே திருந்து மகப்பே றிலாரென் றெமையுலகு
செப்பாது வாய்த்த மணியேயென் றெப்பில் சிவகலைமுன்
சப்பாணி கொட்டு கெனவோர் முறைசெய்கைத் தாளமணி
வைப்பா மளகை யுமாவீர சேகர மாமணியே. (உ00)

மயிலூ ரிளைய தனிச்சேயைக் கூய்மலர் வாய்முத்தமெம்
மயரீ தருகென் றுறுந்தான்வெண் காட ரருமணியே.
நயமார்நின் வாய்முத்த மோர்கா லருளென நல்குமணி
வயமா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உ0க)

நின்றாதை பான்முத் தளவின்றெவ் வொன்று நினைப்பருஞ்சீர்த்
தென்றாலு மெங்கண் மணிநீ பணிமுத் திணைகொன்முற்றென்
றன்றார் சிவகலை முன்றாய வாய்முத் தருளுமணி
மன்றா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௨0௨)

அருண்மேனி திட்டி யுருவர ணேகொ லணிக்கழகு
தருமாகொ லென்ன நிகரா மணிப்பணி சாத்தியரும்
பொருளே வருகெனும் பட்டினத் தார்முனம் போதுமணி
வருமா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (௨0௩)

கண்ணே வருகாங் கண்மணி யேவரு கந்நலஞ்சா
ரெண்ணே வருக வெழிலே வருக விளங்குழவித்
தண்ணேர் மதிவரு கென்னும்வெண் காடர்முன் சாருமணி
வண்ணே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௨0௪)

கரும்பே கரும்பிற் கனிரச மேயுனைக் கண்டுவப்பான்
பெரும்பேறு பெற்றன மென்றுவெண் காடர் பெரிதழைப்பத்
தரும்பால் கமழ்திரு வாயினைப் பாவென்று சாருமணி
வரும்பே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௨0௫)

அருளே வருக வமுதே வருக வரிதுபெற்ற
பொருளே வருக புகலே வருக புகலெங்குலத்
தெருளே வருக வெனவே சிவகலை செப்புமணி
மருள்கா யளகை யுமாவீர சேகர மாமணியே. (௨0௬)

ஆரே யடைந்தனர் நின்போற் பவுத்திர ராங்குநின்றும்
பேரா வருகுக பேரா வருகெனப் பேணிநின்றே
யாராத வன்பொடு ஞானக லாம்பை யழைக்குமணி
வாரா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௨0௭)

சுட்டேது மின்றியு முன்சே யொருசெங்கைச் சுட்டினகப்
பட்டாருந் தன்னைவெண் காட ரிருகரம் பற்றச்சுட்டிக்
கிட்டா வருகென மென்மெலச் சென்னடைக் சேழ்மணிகான்
மட்டா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௨௦௮)

வாரோடு மம்புலி தானுமு மம்புலி வந்திடவிம்
மானிடு பஞ்சர நாருட விங்கருள் வாய்மற்றென்று
மேனோர் சிவகலை யம்புலி வாவென வேட்டமணி
மானே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௨௦௯)

முடிமீ தணிந்த தொடர்பேகொ லென்று முதுபுலவோர்
நெடிதோத வன்னை சிவகலை பாலிந் நிலவுவட்டி
விடுசோறென் றம்புலி கூவுவித் தின்பரு ளீயுமணி
வடிவா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௨௧௦)

தெருவூடு * செற்று சிறுவீ டியற்று சிறுமியர்பா
லருகோடி யுற்று மணிவீடு முற்று மடித்தளிராற்
பொருதே புகாரி னளவாக் குறும்பு புரியுமணி
வருவா னளகை யுமாவீர சேகர மாமணியே. (௨௧௧)

அன்பார்வெண் காடர்க் கருள்வா னடுத்து மவருறையூ
ரின்பாலு ளீரும் பெறுகென் கொடைமுர சேகொலென்ன
முன்பார் சிறுபறை நண்பாள ரோடு முழக்குமணி
மன்பா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௨௧௨)

பொன்ஞன் மணியிற் புனைந்துவெண் காடர் புரிந்தளித்த
மின்னார் சிறுமணித் தேர்சாம்ப ஞடி விழைநண்பரோ
டென்னேர் புகார்மறு கூர்ந்தாட ஞளு மிழைக்குமணி
மன்னே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௨௧௩)

---

* செற்று-வினைத்தொகை.

தன்னரு ளார்சுரர் சாம்பாதி பேர்கொடத் தாவில்புகார்
மன்னவர் பின்னவர் பாலர்க ளாயுற மற்றவரை
யின்னுயிர் நண்பெனக் கொண்டாடல் செய்தரு ளீயுமணி
மன்னெம் மளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௪௪)

அளவாத வேத முதலாங் கலைக்கு மரியயற்கும்
டளகீர் தவம்பெரி தாற்றியுங் காண்பரும் பாதமல
ருளமார்வெண் காடர் கரத்தாற்கண் ணுற்ற வுதவுமணி
வளமா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௪௫)

தெருவார் புழுதி யுறப்படு மோரின சீறடியென்
றுருகாவெண் காடர்மென் றூசுகொண் டேதுடைத் துச்சிகொண்டு
பரிவால் விழியொற்றிக் கன்றிய தோவெனும் பாதமணி
வருமா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௪௬)

உனையீண்டொ ராண்டெலை பெற்றில மேமழ வோடுன்செய
றனைவேண்டு கண்பெற் றிலசிவ சன்மர் தவம்பெரிதென்
றெனையாள்வெண் காட ரளவா மகிழ்கொள வெய்துமணி
மனையா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௪௭)

அடியா ரெவரு மறைச்சிர மோங்கி ரன்பர்நெஞ்சோ
கடியார்வெண் காடர் சிவகலை ஞானக லாம்பையென்பார்
மடியா ரவர்மணி மாளிகை யென்ன மருவுமணி
வடியா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௪௮)

அருந்தன முண்ணென் றருந்தன மார்க்கு மருந்தவத்தின்
குருந்தன பட்டினத் தார்மணிப் பொற்கிணங் கொண்டொருவா
திருந்தனந் தோகைமுன் காட்டியங் கூட்டவுண் டேன்றமணி
வருந்தண் ணளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௪௯)

அணியாதி நாளும் பலகால்வெவ் வேறணிர் தானந்தத்தோ
டணியார் சிவிகையி னூரோ கணிப்பித் தணிமறுகி
னணியார் பவனிவெண் காடர் புகுத்தச்சென் ருளுமணி
மணியா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஉ0)

அணிவீதி சென்றிளங் கோலங்கண் டோடிவந் தாங்கெவரும்
பணிபாதி யாக விழியான் முகந்தெழில் பாத்துண்டின்பந்
தணியாது நோக்கவெண் காடரின் மீண்டுடன் சாருமணி
மணியா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஉக)

சாம்பாதி யோருட னுண்பான் சிவகலை தன்னையுரைத்
தாம்பா லடிசில்செம் பொற்கலத் தூட்டுவித் தாங்கவரோ
டேம்பாவுய் யானந் தனிலாட னிட்டுவித் தேகுமணி
மாண்பா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஉஉ)

அனைநீள் சிவகலை சாம்பன்றன் மார்க்க னவனுடன்சார்
பினைநீ யொழிகெங் குலமணி யேயுனு மெல்லைதவிர்த்
துனையே தியற்று மெனவேண்டி யாங்கியைந் தோதுமணி
மனையா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஉங)

அனையோர் வுருதுடன் சாம்பாதி யோரை யழைத்துச்சென்று
கனையார் கலியின் மரக்கலஞ் சாம்பன் கடவமுன்னின்
றெனையோர் தனைப்பிரி வாற்று துடன்வர வேறுமணி
மனையா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஉச)

அலைமேன் மரக்கலஞ் சேண்செல வேனைய ரஞ்சிநெஞ்ச
மலையா மகாலிங்க மீள்கெனச் சாம்பன் மறுத்தற்கொத்தே
நிலையார் திடஞ்சொலி யேகலன் மீதற னிந்துமணி
மலையா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஉரு)

கரை * மாய நாப்பட் சடன்மேற் கலன்செலக் காவதநீண்
டுரைமா மலையிற் றிமிங்கிலம் வாய்திறந் தூண்விழைந்தே
விரையா வரல்கண் டனையோர் கலக்கம் விலக்குமணி
வரையா வளகை யுமாவீர சேகர மாமணியே. (உஉ௬)

மேலார் திமிங்கிலஞ் சாம்பனைக் கிட்டி விழுங்கிடக்கண்
டேலா விடர்கொண் டனையோர்முன் வேண்ட விரங்கியிடக்
காலா லுதைத்திறை யம்மீன்கொன் றூரருள் காட்டுமணி
மாலா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஉ௭)

சடியா ரடிமலர் தீண்டலு மாண்டுடல் கந்தருவ
வடிவோ டொளியெண் டிசையார வோர்மகன் வானினின்றே
யடிகே ளடிதரும் வாழ்வீதென் றோத வருளுமணி
வடிவா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஉ௮)

உடனு ரிளையர் மிகவியந் தீதென்கொ லோதுகென்னக்
கடன்மீ தொளிர்கந் தருவனை நோக்கிக் கருணைசெய்திவ்
விடமீ னுடல்வெளிப் போந்ததென் னீயுரை யென்றமணி
வடமே வளகை யுமாவீர சேகர மாமணியே. (உஉ௯)

முனிவோத் தமனை யுடனேசுகி ஞானிகழ் மூடபுத்தி
யினைநோக்கிச் சாபந் திமிங்கில மாயுலை கென்றனனவ்
வினையேற் றனனெனுங் கந்தரு வன்சொல் வினவுமணி
மனையா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௩௦)

பங்கே ருகப்பொற் பதமலர் சேப்பப் பரிந்தென்சிரத்
திங்கே யருளலின் மீனுருப் போய்க்கிடைத் தென்னுருவ
மெங்கோ வுய்ந்தேனெனுங் கந்தரு வற்கரு ளீமணியார்
வங்கூ ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௩௧)

---

* மாய்தல் - மறைதல்.

துணையா யளிக்கு மகாலிங்க சாம்பற் றுறந்திங்கெவ்வா
றணைவோ நகர்க்கதி யூகி துணிமனத் தாண்டகையென்
றுணையேனை நண்பர்க் கிரங்கியஞ் சேன்மினென் றேதுமணி
மணையா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௩உ)

சாம்பா வருகென் றவன்மி னுடலுட் டனிதிரிந்தாங்
காம்பாய் தரளம் வலம்புரி வித்துரு மாதியள்ளி
யோம்பார் றுகிலிற் றலைதோட் சுமைகொண் டுறச்செய்மணி
மாண்பா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௩௩)

வருசாம்பற் கண்டிரங் தேனையர் மீனுடல் வாய்வழிச்சென்
றருமா மணிமுற் சுமைபல கொண்டுற வாங்கவரோ
டொருவாது சாம்பன் கலனூர்க் குகைப்ப வுடன்சென்மணி
மருமா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௩௪)

அக்தோவெஞ் சேய்மணி யெங்சேகிற் றேவென் றவசமுற்று
நொந்தேவெண் காடர் சிவகலை நேடுபு நோன்கடல்வாய்ச்
செந்தா மரைத்தண் பதச்சுவ டோர்ந்து செலச்செய்மணி
மைந்தா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௩௫)

கடல்வா யடைந்த சிவகலை யோடுவெண் காடரின்பக்
கடன்மூழ்க நேரிற் கலகின் றிழிந்து கரையினவர்
கடலா ரருளிற் றழீஇக்கொள விற்புகுங் கண்மணிபூ
மடல்பா யளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௩௬)

குருமுகத் தன்றி யெவரேனு நூல்கொளுங் கொள்கைத்தன் றென்
றிருநிலர் தேறவெண் காடர்கல் லூரி யினிற்றொடக்க
வருமொரைந் தாண்டினெல் லாம்வல வாய்மை வயக்குமணி
மருவண் ணளகை யுமாவீர சேகர மாமணியே. (உ௩௭)

பல்லோர் மதிக்க மிகப்பெரு முத்தோன் று பட்டினத்தா
ரில்லோர் விலைஞன்கொண் டேகப் பலர்விலை யேற்றுறுங்காற்
கல்லூரி நின்றிற் புகுந்தாங் கவரைக் கடாவுமணி
மல்லா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உருஅ)

நீகேட்டெ னுட்புகுந் துண்ணேன்வெண் காடர்க்கு நேர்சிலசொற்
ருகேட்க வானந்த மாஞ்சே யுரையென் றவருண்மகிழ்ந்
தேகாட்டி முத்து நிகழ்ச்சியுங் கூறுசொ லேற்றமணி
மாகாட் டளகை யுமாவீர சேகர மாமணியே. (உருகூ)

விலைநோக் கறிவிற் சிறந்தீர்நும் மான்முத்து வேட்டுப்பெற்ரேர்
நிலைநோக் கரிது * நிட் காயுதம் போமென நீவிர்மதித்
தலைநோக்கில் யார்க்கு நகையாமென் றம்மணி தாழ்த்துமணி
மலைநோக் களகை யுமாவீர சேகர மாமணியே. (உசo)

ஒருகாசும் பெற்றில திம்முத்தின் மால்கொண் டுரைத்தநும்மாற்
பெருவாழ்வு பெற்றிருப் பார்பலர் நாமினிப் பேசலென்னே
யொருவாதிம் முத்தினைத் தீண்டினுந் துன்பென் றுரைக்குமணி
மருமா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (உசக)

சாதிக மாமுத் தணிவார்க்கு நூல்பலன் சாற்றியதிற்
பேதகம் பூணிற் பிழையென்ப தோரும் பெருமதியீ
ரீதக நீருள தேநேர் தெரிக்குது மென்றமணி
மாதெம் மளகை யுமாவீர சேகர மாமணியே. (உசஉ)

நீர்முத்தைச் சீர்முத்தென் ருர்காணக் கைவிர னேரமுத்திச்
சீர்மட் குடைந்தமை காட்டவெண் காடருட் டேங்குவகைப்
பேர்முற் றொளித்துமன் னுவேறு காக்குஞ்சொற் பேணுமணி
$ வார்மிக் களகை யுமாவீர சேகர மாமணியே. (உசங)

---

* நிட்கம். ஒருவராகனெடை.

$ மிக்க என்னும் பெயரெச்சத் தகரந்தொக்கு நின்றது.

பெரியோர் பலரை மறியாதெங் கேனும் பெறுவிலைக்கே
* யுரிதாய முத்துடைத் தேநட்டஞ் செய்தனை யோதுவிலை
பெரிதிதி கொல்லெனும் வெண்காடர்க் காமெனப் பேசுமணி
வரியா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உசச)

ஆமேனிட் காயுதம் வெண்காடர் நல்கென் றறைந்திடக்கேட்
டேமோலை ஞானனந் தன்காழி நண்ப னினிதுணர்க
தேமே வயுதம் ‡ பொன் னல்கென் றருட்கையிற் றீட்டுமெணி
மாமே வளகை யுமாவீர சேகர மாமணியே. (உசரு)

தன்னோலை யீற்றின் மகாலிங்க னென்றுகைச் சாத்துமிட்டுப்
பொன்னேர் புகலியிற் போய்க்கொடுத் தேகுதி பொள்ளெனவென்
றன்று ளொருமகன் றன்பாற் கொடுத்தங் கனுப்புமணி
மன்னே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உசசு)

விரைந்தோலை சண்பைஞா னனந்த ரிக்கின விப்புகலுந்
தெரிந்தா ரணிவித் தியமாதி யோடெதிர் சென்றவர்கை
யருந்தா வமுது கிடைத்தாங் குவப்ப வருளுமணி
வரந்தோ யளகை யுமாவீர சேகர மாமணியே. (உசஎ)

சிரமேல் வகித்தவ் வருளோலை யூரிற் சிவிகைவலம்
வரவேத நாத முதலாஞ் சிறப்பொடில் வந்தருச்சித்
தொருவாது ஞானனந் தன்மகிழ் கூர வுதவுமணி
வரமே வளகை யுமாவீர சேகர மாமணியே. (உசஅ)

---

* எதுகை நோக்கி உரித்து உரிதுஎன்றாயது. "உரிதாவுபதேச" மென்றாற்போல.

‡ பொன் - ஈண்டு எண்ணைக்குறியாது பொருளெனக் குறித்து நின்றது.

அளவாச் சிறப்பு வகையா லியற்றி யயுதநிட்கங்
கொளவோலை தந்த மகன்பா லளித்தினிக் கூடினென்பா
லுளவோலை யீகென ஞானனந் தற்கரு ளூட்டுமெணி
வளமா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உசகூ)

தனதோலை பெற்றருண் ஞானனந் தன்பொரு டான்கொடுசார்ந்
தனையோன்வெண் காடர்முன் ஞானனந் தன்செ யருமையுரைத்
தினிதிய வோசைக் கடன்மூழ்க நன்றரு ளியுமணி
வனமா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உருo)

பலமான் டிருவிளை யாடலங் காற்றிப் பதினைந்தின்மே
னிலவாண்டி ஞேர்பகல் வெண்காடர் முன்கட னீங்கிச்சென்றே
நலமாண்பொ னீட்டி வரவிடை கேட்டு நயக்குமணி
வலமான் பளகை யுமாவீர சேகர மாமணியே. (உருக)

மணியே நினைப்பிரிந் துன்றுயெங் காருயிர் வாழுமெங்கண்
மணியே பிதாமகி யாற்றுங்கொ லென்றுடன் மன்னுங்கொல்சேய்
மணியே யெனும்பட் டினத்தாரைத் தேற்றிய வாய்மைமணி
மணியே பளகை யுமாவீர சேகர மாமணியே. (உருஉ)

நின்னலும் பொன்பெற வென்குறை நம்புடை நீயெமக்கோர்
பொன்னே மணியே யமைசென்வெண் காடர்க்கப் பொன்பெறங்கா
றன்னு லுருப்பொரு ளென்னுமென் றவ்வியல் சாற்றுமணி [ற்
மன்னே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உருங)

தடைநீர் செயலெற் பிரியாமைக் கத்தடை தானதற்கே
தடையா மெனப்பயஞ் சாரும்வெண் காடர்தன் ரூயவர்தாய்
விடையோ டெரிக் கலன்மேற் செலன்முறை மேவுமணி
மடையா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உருச)

பிரயாண மேன்மை யுருவா விளங்கப் பெருநகர்சூழ்
வரவார் கலிசெல் கலத்தோரை வாய்ப்ப மருவிநண்பு
திரியாத சாம்பன்முன் னோர்கலன் சார்தரச் செல்லுமணி
வரியா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உருரு)

கடன்மீது சாம்பன்முன் னோர்சரக் கேற்று கலங்களுகைத்
துடன்மேவ வூர்ந்துசென் றோரிடை நீர்பல வூர்கள்சென்றிவ்
விடைமாத மைர்திறுன் மீள்கென வாணைதந் தேகுமணி
வடமே வளகை யுமாவீர சேகர மாமணியே. (உருசு)

தானூர் கலநிறை பொன்முற்று நன்னெறித் தந்தொழித்து
மேனேரில் கோமய * சுட்க முனக்கல மேனிறைத்தங்
கேனோரும் வந்துகண் டேசனைப் பித்த னெனச்செய்மணி
வானே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உருஎ)

எனையோர் கலன்க ளொடுகலன் மேற்கட லெய்துமெல்லை
நினையா மழைமுன் னிடர்சாம்ப னுதியர் நேர்ந்தொடுங்கித்
தனைவேண்டு கோமய சுட்கங்கைச் சாத்துறத் தந்தமணி
வனைமா னளகை யுமாவீர சேகர மாமணியே. (உருஅ)

தருகோ மயம்பி னிதுபோற் றரக்கிழி தன்னிலொன்றிட்
டொருவா விரன்முத் திரையொடுன் பால்வைத்து முண்மையென்றே
வருவாசி பத்திரஞ் சாம்பாதி யோரிடை வாங்குமணி
மருமா னளவக யுமாவீர சேகர மாமணியே. (உருகூ)

அலைமேன் மழைபதி னைந்தினம் பெய்தங் ககன்றிடலுங்
கலனூர்ந்து காவிரிப் பட்டினஞ் சார்ந்துசற் காண்டல்பெரு
நிலையால் வருந்துவென் காடர்முன் பேச்சற்று நின்றமணி
மலையா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உசூ0)

---

* சட்கம் - உலர்ந்தது.

முன்னேகு சாம்ப னுரைத்தாங்செஞ் சேயுணர் முற்றிழந்தா
னென்றுவெண் காடரும் பித்தனென் றேமதித் தெய்துதன்னை
யந்நா ளறைபுகுத் தேபூட்டி வைப்ப வமர்ந்தமணி
மன்னே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உசுக)

வெண்காடர் சாம்பன்முன் னோரைத் தடுத்து விளைவுவினய்க்
கண்காணக் கோமயஞ் சூழ்கிழி நீக்கிக் கதிர்மணியாய்ப்
பண்காணு மாடக மாக்காண விம்மிதம் பண்ணுமணி
வண்கா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (உசுஉ)

வருசாம்பன் சொன்முறை கேட்டாங் கறையினுள் வைத்ததன்பாற்
றெரிவான் றிறந்தங்கட் காணுவெண் காடர் திகைத்தலமந்
தருமாந்த சேய்மணி யேயென வேங்க வகன்றமணி
வருமாண் பளகை யுமாவீர சேகர மாமணியே. (உசுங)

அயராவெண் காடர் சிவகலை பாற்சென் றருமணியெம்
முயிரா மணியெம் மகாலிங்க மாமணி யூங்குற்றதோ
மயிலே யுரையென் றுயிர்சோர்ந் துரைப்ப மறைந்தமணி
மயர்தீ ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உசுச)

வந்தான் மகாலிங்க நுந்தாய்க் கெனக்கு வரம்பின்மகிழ்
தந்தான் பலபணி தந்தா னருண்மணி தந்தனனென்
றுந்தோகை பட்டினத் தார்க்குச் சிவகலை யோதுமணி
மைந்தா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உசுரு)

அணியாதி தந்துபி னென்றுதை யீண்டறி னுங்கவர்க்கிக்
கணியோலை யீகெனத் தந்தா னதுவிது காண்கவென்னுப்
பணியார் சிவகலை வெண்காடர் பாற்றரப் பண்ணுமணி
மணியா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உசுசு)

தருமோலை கண்டேன் முற்றும்பொய் பற்றுந் தனிச்சிவமே
பொருளாகு மத்துவி தானந்த வாழ்வெனைப் பூட்டவந்த
குருவே மகாலிங்க மென்றவெண் காடர் குறித்தமணி
வருவா னளகை யுமாவீர சேகர மாமணியே. (உசுஎ)

இன்னேர் பொருள்பல கோடியுங் குறையிட் டேவருக்கு
மன்னே ரகப்புறப் பற்றொருங் கோச்சி யகன்றுதனி
யென்னே ரிடைமரு தூர்க்குவெண் காடரை யேற்றுமணி
மன்னே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உசுஅ)

இடைமா மருதிற்சென் றானந்த மேற்கொண் டிறைஞ்சித்தன்முன்
னடமாதி யாற்றித் திளைத்தொரு வாதந் நகர்க்கருணைத்
தடமேல்வில் வத்தமர் வெண்காடர் நிட்டையிற் சாருமணி
வடமா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உசுகூ)

தன்னேரில் * காட்ட சமாதிவெண் காடர் தனித்தமரு
மந்நாணின் றுய்கடன் மூன்றாற்றென் றெல்லை யறைந்தனுப்பிப்
பொன்னேர்வெண் காட்டற் புதம்பல செய்விக்கும் போதமணி
மன்னே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஎ0)

நஞ்சா ரபூப மளித்தானி லொன்று நசித்தருகொன்
றெஞ்சாவெண் காடர்வெண் காட்டினில் விண்ணெறிந் தேகுமப்பம்
விஞ்சேர்செய் காவிரிப் பட்டினத் தம்மனை வீழ்த்துமணி
மஞ்சா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஎக)

பல்லோ ரிவெனங் கல்லே றுடன்செலும் பட்டினத்தார்
சொல்லார் தியானத் தொடுவொழைத் தண்டுகே டேச்சிதையா
வில்லா ரனைக்கரு ளாலங்கி மூட்ட விளக்குமணி
மல்லா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஎஉ)

---

* காட்டசமாதி - அசைவற்ற சமாதியென்று பொருள் கொள்ளப்படும்.

நலந்தோ யனைகடன் முற்றிவெண் காட்டினு நற்றில்லைமுற்
றலந்தோறும் பட்டினத் தார்சென் றிரண்டற்ற தாவிலின்பங்
கலந்தே பலவருட் பாமாலை சாத்தக் கனிந்தமணி
வலந்தோ யளகை யுமாவீர சேகர மாமணியே. (உஎரு)

தண்கான் செறிவிற் கணேசன் றளியுட் சமாதியிற்சார்
வெண்காடர் மேனிக் கணிபூட்டிச் சோரர் விலகிடப்பின்
கண்காண் புரங்கா வலர்காற் றளையிடக் காட்டுமெணி
வண்கா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (உஎச)

பொருள்கூட்டுஞ் சோரனைக் கண்டோமென் றேதப் புரம்புரப்போ
ரருள்கூட்டி யற்பத் திரகிரி வேந்தடைந் தன்பிற்கண்டே
தெருள்கூட் டருட்சிவ மென்னவெண் காடரைத் தேற்றுமணி
மருள்வீட் டளகை யுமாவீர சேகர மாமணியே. (உஎரு)

அடிகே ளறியாப் பிழைபொறுத் தாள்சென் றடிபணிந்தே
கடிவான் றளையையெண் ணும்பத் திரகிரி கண்டிடமுன்
பொடியாவெண் காடர் மலத்தளை மாற்றல் புலன்செய்மணி
வடிவா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஎசு)

ஓவா தடிவீழ்ந் துறும்பத் திரகிரிக் குண்மைநிலை
தாவா துரைத்து மகாலிங்கற் சார்கெனச் சாற்றியரு
டேவாம்வெண் காடரவ் வேந்தா சனத்துறச் செய்தமணி
மாவா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஎஎ)

நான்வேண்ட வென்மணி யாசனத் தெங்குரு நாதவமர்ந்
தேனீண் டொளித்த தெனப்பத் திரகிரி யெங்குந்தரீஇத்
தான்வேண்டப் பட்டினத் தார்தலஞ் சூழச்செய் சாந்தமணி
வான்வேண் டளகை யுமாவீர சேகர மாமணியே. (உஎஅ)

செல்லா வருஞ்சிவ தீர்த்தம்பல் சேத்திரஞ் சென்றுசென்றே
யெல்லாம் பணிந்துவெண் காட ரிடைமரு தேகிப்பின்னும்
வில்லார்முன் கூவிள மூலத் தமைவுற வேட்டமணி
மல்லா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஎகூ)

தான்றே டியபத் திரகிரி யார்தனிச் சார்ந்திட்டெங்கு
மூன்று தரத்தி னிடைமரு தூர்புகுந் தோர்ந்துகண்டெங்
கோன்று வருளென் றிரப்பவெண் காடரைக் கூட்டுமணி
வான்று மளகை யுமாவீர சேகர மாமணியே. (உஅ0)

தம்மானை யாற்பத் திரகிரி மேற்குறத் தாங்கிழக்குற்
றம்மா தவமெய்ச் சிவராச யோக வதிதவின்பிற்
சும்மா விருப்பவெண் காடரை யாட்கொளுந் தூமணியார்
வம்மா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஅக)

தானேகிப் பிச்சை வினவிக் குடும்பியென் றன்மைதெரித்
தானு தமர்பத் திரகிரி நாய்கல னுங்கொழிப்ப
மேனு யரசன் மகளா யவற்செல விட்டமணி
வானு டளகை யுமாவீர சேகர மாமணியே. (உஅஉ)

பெண்ணு யிடைமரு தின்னுடல் போக்கியும் பின்னுமொரு
பெண்ணு யுதித்ததெ னென்னவெண் காடர்முன் பேசியப்பெண்
விண்ணோர் தரும்பத் திரகிரி யாருள மேவுமணி
வண்ணே ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஅங)

மணமின் டொழிகென் குருநாதற் கேகென வந்திறைஞ்சுந்
திணமின் டிராச குமாரி தனைப்பத் திரகிரியா
லெணமான் டிலிங்க வுருவாயெஞ் ஞான்று மிலக்குமணி
வணமின் டளகை யுமாவீர சேகர மாமணியே. (உஅச)

இடைமா மருதிற் சிவயோக ஞானமெய் யின்பநிலை
யிடையா தமர்பத் திரகிரி வேந்துட னெண்கயிலை
யிடையேசுத் தாத்துவி தானந்த வாழ்வுற வேற்றுமணி
மடையா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உஅரு)

அருள்வாய்மை யார்பட் டினத்தா ரிடைமரு தூரகன்றே
திருவார ணூசிமுற் சென்றுவெண் காட்டினிற் சேர்ந்தர்மனே
தருவாய்மை யாலங் கவர்சிறை நீக்கரு டங்குமணி
மருள்கா யளகை யுமாவீர சேகர மாமணியே. (உஅசு)

வருசேந்த னூரன் புரையோர்ந்து தில்லை வனத்தமல
னருள்சேர்ந்த மர்கவென் றேவிவெண் காடர்சென் றூன்மலிங்கப்
பொருள்வாய்ந் திருப்பத் திருவொற்றி யூரிற் புகுத்துமணி
மருமாண் பளகை யுமாவீர சேகர மாமணியே. (உஅஎ)

வெண்காட ரொற்றி நகர்ச்சா கரதட மேவியுல
கங்காண மேனி சிவலிங்க மாயுறக் காட்டியென்று
மெண்கா ணுலக மெலாந்தொழு துய்யச்செய் யின்பமணி
வண்கா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (உஅஅ)

எட்டு மிரண்டு மிலிங்கம தாமென் றியம்புமனு
மட்டி னுருதிலிங் கம்மூர்த்தி மானிலை வாய்ந்திலகப்
பட்டினத் தார்மெ யிலிங்க முயிர்சிவ மாப்பணித்த
மட்டென் னளகை யுமாவீர சேகர மாமணியே. (உஅகூ)

முனிவோ ருடறளி யாவியி லிங்கமம் மூர்த்தியனி
யெனநூ லுரைப்பவென் பட்டினத் தாருட லேயிலிங்கந்
தனியாவி மூர்த்திய னுப்பணித் தாயருட் சார்பளித்தாண்
மனியா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உகூ0)

சிறிதேனு நன்மையொன் றில்லே னளப்பருந் தீமையுள்ளேன்
வெறியேற் கெவ் வாறுன் னருள்கூடு மென்று வெரீஇயுணர்வும்

பறியே கொடுத்தலை நின்றே னெனையுங்கண் பார்த்தருவாய்
மறியே யளகை யுமாவீர சேகர மாமணியே. (உகஙக)

முன்னே புரிந்தபஃ றீவினை மாவினை முன்னிமுன்னி
யென்னே விடாரினி யென்றேழை யுட்குலைந் தேங்குகின்றே
னன்னே யபயமெ னன்று லபய மபயமருண்
மன்னே யளகை யுமாவீர சேகர மாமணியே. (உகஙஉ)

பிறிராத தீமைகள் செய்தேன் சுகிர்தத்திற் பேச்சுமில்லே
னறிகோர ரூபி வருஞ்சடை நாட்செய லாவதென்னே
சுறிவே றிலாத வெளியேற்குன் றாட்பங் கயமலதோர்
மறியே தளகை யுமாவீர சேகர மாமணியே. (உகஙங)

வினையே புரிந்தங் கதிலே பழகும் வெறியனெறி
யினையோர் கனவு நினையேன் மறலி யெழுங்கடைநா
ணினையோ விடவு முணர்வாங்கொ லாரரு ணீபுரியாய்
மனையா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உகஙச)

ஒருகோடி தீமை புரிந்தே பிறந்திங் குழன்றமின்று
ருகோடி யோடி யலக்கணுற் றேனினி யாற்றகில்லேன்
முருகோ டிதழி மதிவேணி யாயெனை முன்னியருள்
வருகோ வளகை யுமாவீர சேகர மாமணியே. (உகஙரு)

பொல்லே * னெனுமென் வெளிவேடங் கண்டுளப் பொய்யுணரார்
நல்லோ ரெனைமெய் யடியானெனன் றோதுவர் நானென்செய்கேன்
சொல்லாங் கதுபழு தாகா தருளுதி தூமணியே
மல்லா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உகஙசா)

மனையாசை சுற்று மகவாசை மற்றும் வரும்பொனிலப்
பனையாசை யுற்றுத் தினையாசை யேனுமுன் பாதம் [illegible] பி

* எனும் - இடைச்குறை.

னினையாசை யற்ற வினையேனை யற்ற நினைதிசொல்லோ
வனையா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (உகூஎ)

கங்கா தரதிரி யம்பக மாமணி கண்டதமிழ்ச்
சங்கா தரஙிரு பாகர சேகர சந்திரமா
துங்கா தரகன சாபவென் றோதுமித் தொண்டருளார்
வங்கா ணளகை யுமாவீர சேகர மாமணியே. (உகூஅ)

அண்ணா லபய மழகா வபய மழகியமுக்
கண்ணா வபயங் கனியே யபயங் கனிபுமறைப்
பண்ணா வபயம் பவனே யபயம் பவளமணி
வண்ணா வளகை யுமாவீர சேகர மாமணியே. (உகூகூ)

தாயே யடைக்கலந் தாதா யடைக்கலஞ் சாற்றுமன்பர்
நேயா வடைக்கல நீதா வடைக்கல நேரிலருட்
டுயோ வடைக்கலந் தோன்றா லடைக்கலந் தூமறைசொல்
வாயா வளகை யுமாவீர சேகர மாமணியே. (௩00)

பெரியோ ரெவர்க்கு முரைப்பரி தாமுன் பெருமையெங்கே
தெரியாச் சிறிய னெளிமையெங் கேநசை செல்வழிச்சென்
றரிதேத் தியவிப் பிழைபொறுத் தாண்டு னருடருவாய்
வரியா ரளகை யுமாவீர சேகர மாமணியே. (௩0க)

## வீரசேகரமாமணிமாலை

முற்றிற்று.

---

சிவமயம்.

சாக்கைத்

# திருவிரட்டைமணிமாலை.



காப்பு.

மாமேவு சாக்கையென வாழ்த்துமள கைப்பதிவாழ்
தேமேவு மாவீர சேகரர்மேற்—பாமே
விரட்டைமணி மாலை யிசைப்பவடி யேனைத்
தெருட்டியருள் செய்கவைங்கைத் தே.

நூல்.

மாவீற் றிருக்குமலர் வாவியள கைக்கரசே
தேவீற் றிருக்குமன்பர் செந்நாவின்—பாவீற்
றிருக்குஞ் சுவையே யெமையா ளுமையே
யிருக்குமுண ராதபொரு ளே. (௧)

பொருளே யளகை யமர்வீர சேகர பூவையர்பான்
மருளே பொருளென மான்றுநின் றாளை மறந்திட்டந்தோ
தெருளே சிறிது மிலாதுலைந் தேனின் றிருவருளால்
வெருளே லெனவொரு நான்மொழிந் தாண்டிட வேண்டுவனே. (௨)

வேண்டுவது மோர்வோய்நீ வேண்டவெலா மீவோய்நீ
வேண்டுவதீ தென்றுணர்வி வேகியல்லேன்—வேண்ட
றமையான் புகல்வதெவன் றண்பொழில்சூழ் சாக்கை
யுமையாண் டவளே யுரை. (௩)

உரையனு மானம் பிரத்தியக் காதியி னுண்மையுணர்ந்
தரிபிர மாதியர் தாமும் மடைதற் கரும்பொருளே
விரிபொழிற் சாக்கை யமர்வீர சேகர மேதையில்லேன்
பரிவில்லன் வேறொரு பற்றில னீயெனப் பார்த்தருளே. (௪)

அருளே யெனநினைவே தாகமங்கள் கூறும்
பொருளே னையநூல்போற் பொய்யோ - மருளேசார்
தீயவனே யாயினுநின் சேயளகை நாயகியான்
றூயுமைநீ யேயருணின் றாள். (௫)

தாளா தரித்தொரு நாளா வுனையர்ச் சனைபுரியேன்
வாளா கழித்தன னுள்வீர சேகர மாணெழிலெண்
டோளா வடியவர் மீளா நெறியருள் சோதிகள
காளா வளகையில் வாழ்வே யருடிநின் கண்ணருளே. (௬)

கண்ணே யெனதிரண்டு கண்மணியே யம்மணியின்
வண்ணூடு பாவாய் மலைப்பாவாய்—விண்ணோர்
தினமேத்து சாக்கைச் சிவையே யுமையே
யெனதார்த்தி தீர்த்தருணீ யே. (௭)

ஏதென் றுரைப்ப லருள்வீர சேகர வேந்திழையார்
சூதொன்று கொங்கைத் துணைக்கே யுருகுமித் தூர்ப்புத்தியைத்
தீதென்று நேரே தெரிந்து மயங்கிலென் செய்குவல்யா
னீதொன் றொழிப்பினெல் லாமுண் டளகைக் கிறையவனே. (௮)

இறையுந் தவம்புரியே னேழையேன் றீமை
குறைவின்றி யாற்றுங் கொடியே—னிறையுந்
தவவாணர் சாக்கை தனையா ளுமையே
யவவாழ்வி லாழ்த்தா தருள். (௯)

அருளினஞ் சேலென் றழைப்பினு நீயென் னதன்மமெல்லாம்
பொருளினுட் கொண்டு புறந்தள் ளினுநின் புகலன்றியோர்

தெருளிட் முண்டுகொள் மாவீர சேகர செய்யமிடற்
றிருளையும் வைத்தருள சாக்கையெந் தாயெனை யேன்றுகொள்ளே. ()

கொள்ளுவதுன் சேவடியே சோற்றொடியார் பான்மயலே
தள்ளுவதென் றேர்ந்துந் தணந்திலனவ்—வெள்ளுநெறி
சாக்கையுமை யேநெடுநோட் சார்பயிற்சி யாமிதைநீ
நீக்கமுடி யாதோ நினை. (கக)

நினையா னறவுணர்ந் தத்துவி தானந்த நேர்மையுறற்
கெனைநான் பிரமமென் னுணவ நாட்டத் திழிந்தழலா
தனையேசுத் தாத்து விதநெறிச் சேர்த்தனை யையமெய்யன்
பினையா னளகை யமர்வீர சேகர வெய்தலென்றே. (கஉ)

என்றுமடிக் கன்புடையார்க் கெண்ணியாங் கெல்லாமுன்
னின்றுரையா முன்னருளு நின்மலநீ—சென்றிறைஞ்சு
மென்முறைகே ளாதிருத்த லென்முறையெந் தாய்சாக்கை
யின்முறையே செய்யுமுமை யே. (கங)

ஏதம் பலவாற் றிழுதையன் யானவ் விழிதொழில்க
ளோதுந் தரமன் றவைகணின் முன்பிரிந் தோடுமென்ப
சீதந் தருபொழிற் சாக்கையெம் மானின் றிருமுனுற்றேன்
போதம் புரிந்தெனை யாள்வீர சேகர பூரணனே. (கச)

பூமகளோர் தாரம் பொருட்பெருக்க நன்மகப்பே
றுமவைமுற் காணளவே யாங்களிக்கு—நாமகளும்
வீட்டின்பு நல்கும் வியனளகை வாழுமைதன்
பூட்டும் பரிபுரச்செம் பூ. (கரு)

பூரண னாரண னாதிய ரோலிடப் போந்தவிட
பாரண னாரண சூலிவெண் கோடிரு பான்சதஞ்சார்
வாரண னாரணஞ் சொல்வீர சேகரன் மாநிமித்த
காரணனாரண வுஞ்சடை யானள கைக்கரசே. (கசா

அரசனமே வான்போற் றளகை யுமையே
வரையரசன் பெற்ற மயிலே—யுரைசெய்
சுகமே சுகமேநின் றாவுருவென் றேத்தா
யகமே யகமேகு மால். (௧௭)

ஆலம் பருகு மணிகண்ட சாக்கை யமர்ந்தருணி
ராலம்ப ஞாலம் பணிவீர சேகர வாதிவட
வாலம் பரவறி வம்பர நாவிரண் டம்பரமா
மாலம் பரவின தாளன்றி யுண்டுகொ லாதரவே. (௧௮)

ஆதரமொன் றில்லாத வாதனெனக் கைவிடிலென்
காதரந்தீர்த் தாரருள்வார் காசுகுறித்—தோதளகை
வாழுமையே யோர்கான் மகவைமுனிந் தேகினும்பின்
றாழுவளோ போயணைக்குந் தாய். (௧௯)

தாயுந் தமருந் தனையருந் தாரமுந் தந்தையுமுன்
னீயென் றுனையடைந் தேனழி யாத நிறைசெல்வமுன்
னேயும் பலவு மொருவீடு மீக வெழிலளகை
வாயும்பர் போற்ற வமர்வீர சேகர மாதவனே. (௨௦)

சாக்கைத் திருவிரட்டைமணிமாலை

முற்றிற்று.

---

